


ந சுப்பு ரெட்டியாரின்

# பன்னோக்குத்திறன்

ஆ விஜயலெட்சுமி
ஆய்வியல் நிறைஞர் (2019-2020)
அழகப்பா அரசு கலைக்கல்லூரி

eBook
மின்நூல்

பேராசிரியர் எழுதிய
**ஆழ்வார்களின் ஆராஅமுது**
என்ற நூலினை பின்புலமாக்கொண்டு
எழுதப்பெற்ற
**ஆய்வேடு**



## பன்னிருவர்

ந சுப்பு ரெட்டியார்100
*Centenary Committee Publications*

978-81-948697-8-8

ஆய்வேட்டின் நூல்வடிவு

ந சுப்பு ரெட்டியாரின்

# பன்னோக்குத்திறன்

அழகப்பா அரசுக் கலைக் கல்லூரியின்
ஆய்வியல் நிறைஞர் மாணவி (2019–2020)
**ஆ விஜயலெட்சுமி** அவர்களின்
**ஆய்வேடு**

தொகுப்பு:
**நூற்றாண்டுக் குழு**




ந சுப்பு ரெட்டியார்100
Centenary Committee Publications

# அன்புப்படையல்



**7 Oct 1920 :: 3 Dec 1998**
**வீறுகவியரசர் முடியரசனார்**
(பேராசிரியரின் கெழுதகை நண்பர்)

# பதிப்புரை

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார் அவர்கள் எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று, ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர். திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர். பல பல்கலைக்கழகங்களில் சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி, நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர். பல ஆய்வாளர்களை உருவாக்கியவர். வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர். **136 [135 +1]** நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015 – 2016) 108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும் மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

பேராசிரியரின் நூற்றாண்டில் (2015 – 2016) நூற்றாண்டுக்குழு தமிழகமெங்கும் நடத்திய 108 நிகழ்வுகள் அகில இந்திய சாதனையாக அங்கீகரிக்கப் பெற்றுள்ளன. நூற்றாண்டில் பேராசிரியரின் தமிழ்த்திறத்தையும், அறிவுநுட்பத்தையும் வெளிக்கொணரும் பொருட்டு பன்னிரெண்டு நூட்கள் வெளியிட்டப்பெற்றன. அவரது 120 நூல்கள், இந்திய அரசு நல்கிய **ISBN** எண்களுடன், மின் நூல்களாக மாற்றுப்பெற்று https://archive.org/details/@centenary1916nsr2016 என்ற இணைதளத்தில் அனைவரும் பதிவிறக்கம் செய்யும் வகையில் அமைக்கப்பெற்றுள்ளன.

பேராசிரியரின் படைப்பான “***கவிஞர் வாலியின் இராமாநுஜ காவியம் – ஒரு மதிப்பீடு***” எனும் நூலை பேராசிரியரின் நூற்றாண்டிற்குப் பின்பும் (102வது), இராமாநுஜரின் ஆயிரமாண்டிற்குப் பின்பும் (1002வது) நூற்றாண்டுக்குழு 2018ல் வெளியிட்டது.

பேராசிரியரின் நூட்களை அடித்தளமாக்கொண்டு சுமார் 25 முதுகலைப்பட்ட மாணாக்கர்கள், ஆய்வியல் நிறைஞர் மாணாக்கர்கள் மற்றும் முனைவர் பட்ட ஆய்வாளர்கள் பல்வேறு பல்கலைக் கழகங்களில் (சென்னைப் பல்கலைக்கழகம், மதுரை காமராஜ் பல்கலைக்கழகம், பாரதிதாசன் பல்கலைக்கழகம், மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம்,

அழகப்பா பல்கலைக்கழகம் மற்றும் தமிழ்நாடு ஆசிரியர் கல்வியியல் பல்கலைக்கழகம்) ஆய்வு மேற்கொண்டு வருகின்றனர்.

மூன்று முனைவர் பட்ட ஆய்வாளர்கள் ஆய்வு மேற்கொண்டு, சென்னை பல்கலைக் கழகம், மதுரை காமராஜ் பல்கலைக் கழகம் மற்றும் பாரதியார் பல்கலைக் கழகம் ஆகியவற்றில் ஆய்வேடு சமர்ப்பித்து முனைவர் பட்டம் பெற்றுள்ளனர். ஐந்து முதுகலை பட்ட மாணாக்கர்கள் (திராவிடப் பல்கலைக் கழகம் : 2017 – 2019) ஆய்வேடு சமர்ப்பித்துள்ளனர். ஐந்து ஆய்வியல் நிறைஞர் மாணாக்கர்கள் (தமிழ்ப் பல்கலைக் கழகம் : 2018 – 2019) ஆய்வேடு சமர்ப்பித்து ஆய்வியல் நிறைஞர் பட்டம் பெற்றுள்ளனர்.

தமிழ்த்துறை, அழகப்பா அரசு கலைக்கல்லூரி (அழகப்பா பல்கலைக் கழகம்) பரிந்துரைத்த ஐந்து ஆய்வியல்நிறைஞர் மாணாக்கர்கட்கு **ந சுப்பு ரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளை** **“NSR100 Kamatchi Ammal Fellowship”** வழங்கியது. அதன்கீழ், பேராசிரியரின் ஏதேனும் ஒரு நூலை ஆய்வுக்குரிய மையக்கருத்தாக தேர்ந்தெடுத்து திறனாய்வு செய்யும் ஆய்வியல்நிறைஞர் மாணாக்கர்கட்கு உதவித்தொகையும், நூலைத் தேர்ந்தெடுக்க ஆலோசனையும், தேர்ந்தெடுக்கப் பெற்ற நூலும் வழங்கப்பெற்றன. ஐவரில், நான்கு ஆய்வியல்நிறைஞர்கள் ஆய்வேடுகளை தமிழ்த்துறையில் சமர்ப்பிக்க இயலாததால், சமர்ப்பிக்கப்பெற்ற ஆய்வேடு மட்டிலும் ஈண்டு வெளியிடப்பெறுகின்றது.

திறனாய்வு செய்த மாணாக்கர்:

ஆ விஜயலெட்சுமி (பதிவு எண்: 0119605009)

ஆய்வேட்டின் தலைப்பு:

**ந சுப்புரெட்டியாரின் பன்னோக்குத்திறன்**

தெரிவு செய்யப்பெற்ற பேராசிரியரின் நூல்:

***ஆழ்வார்களின் ஆரா அமுது***
https://archive.org/details/aazhvaraaraaamuthu_201907

இவ்வாறு சமர்ப்பிக்கப்பெற்ற ஆய்வேடு தொகுக்கப்பெற்று

ந சுப்பு ரெட்டியாரின்

**பன்னோக்குத்திறன்**

எனும் நூலாக வெளியிடப் பெறுகின்றது. நூலின் ஒரு படி மாணவிக்கும், 5 படிகள் கல்லூரிக்கும் வழங்கப்பெறுகின்றன.

**நூற்றாண்டுக்குழு**

# NSR100
# KAMATCHI AMMAL
# FELLOWSHIP

## MPhil Students in Tamil




AWARDED TO :

## ஆ விஜயலெட்சுமி

(பதிவு எண்: 0119605009)

(பேராசிரியரின் ஒரு நூலை மையக்கருத்தாகக் கொண்டு
ஆய்வு செய்த ஆய்வியல் நிறைஞர்)

உதவித்தொகையும், நூலைத் தேர்ந்தெடுக்க ஆலோசனையும்,
தேர்ந்தெடுக்கப்பெற்ற நூலும் வழங்கப்பெற்றன.

ஆய்வேட்டின் தலைப்பு: ந சுப்பு ரெட்டியாரின்
**பன்னோக்குத்திறன்**

பேராசிரியரின் நூல்: **ஆழ்வார்களின் *ஆராஅமுது***

துறை: தமிழ்த்துறை, அழகப்பா அரசு கலைக்கல்லூரி,
(அழகப்பா பல்கலைக்கழகம்)

நெறியாளர்: முனைவர் சி பரமேஸ்வரி

வருடம்: ஏப்ரல் 2020



*www.nasubbureddiar100.in*

# ந.சுப்புரெட்டியாரின் பன்னோக்குத் திறன் (ஆழ்வார்களின் ஆராஅமுது)

அழகப்பா பல்கலைக்கழக ஆய்வியல் நிறைஞர் (எம்.ஃபில்)
பட்டத்திற்காக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்
**ஆ.விஜயலெட்சுமி**
(பதிவு எண் : 0119605009)

நெறியாளர்
**முனைவர் சி.பரமேஸ்வரி** எம்.ஏ.,எம்ஃபில்.,பிஎச்.டி.,
உதவிப்பேராசிரியர்
தமிழ் உயராய்வு மையம்,
அழகப்பா அரசு கலைக் கல்லூரி,
காரைக்குடி - 630 003





**தமிழ் உயராய்வு மையம்**
**அழகப்பா அரசு கலைக்கல்லூரி**
(தேசிய மறு நிர்ணயத் தரமதிப்பீட்டுக் குழுவினரால் "B" தரம் மற்றும் முதல் நிலை பெற்றது)
காரைக்குடி - 630 003

**செப்டம்பர் - 2021**

# நன்றியுரை

**"ந.சுப்புரெட்டியாரின் பன்னோக்குத் திறன் (ஆழ்வார்களின் ஆராஅமுது)"** என்னும் தலைப்பில் ஆய்வுப் பணி மேற்கொள்வதற்கு வாய்ப்பளித்த அழகப்பா அரசு கலைக்கல்லூரி முதல்வர் அவர்களுக்கு என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்வினைச் செம்மையாக முடிப்பதற்கு நெறிப்படுத்திய என் ஆய்வு நெறியாளர் தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர் முனைவர் சி.பரமேஸ்வரி அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியினைச் சமர்ப்பிக்கின்றேன்.

ஆய்வுத் தொடர்பான பல்வேறு அறிவுரைகளை வழங்கிய தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் அனைவருக்கும் என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்வுக்குத் தேவையான நூல்களைத் தந்து உதவிய தமிழ்த்துறை நூலகத்தார்க்கும் அழகப்பா அரசு கலைக் கல்லூரி பொது நூலகத்தார்க்கும் அழகப்பா பல்கலைக்கழக நூலகத்தார்க்கும் என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என்னைச் சான்றோனாக உயர்த்துவதற்கு அல்லும் பகலும் உழைத்த என் பெற்றோர் திரு.மு.ஆண்டி, திருமதி ஆ.சித்ரா ஆகியோர்க்கும் இவ்வாய்வேடு சிறப்பாக அமைய உதவிய என் சகோதர, சகோதரிகளுக்கும் உறவினர்களுக்கும் மற்றும் நண்பர்களுக்கும் என் நன்றியினை உரித்தாக்குகிறேன்.

இவ்வாய்வேட்டைச் செம்மையாகவும் நேர்த்தியாகவும் கணினியில் அச்சாக்கம் செய்தளித்த காரைக்குடி, மகேஷ் கணினி அச்சகத்தார்க்கும் எனது நன்றியினை உரித்தாக்கிக்கொள்கிறேன்.

நன்றியுடன்,

(ஆ.விஜயலெட்சுமி)

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | |
|---|---|
| அமல.பதி. | - அமலனாதிபிரான் பதிகம் |
| இரண்.திருவந். | - இரண்டாம் திருவந்தாதி |
| இராமா.நூற். | - இராமாநுச நூற்றந்தாதி |
| உ.ஆ. | - உரையாசிரியர் |
| கம்ப.அயோ.காண். | - கம்பராமாயணம் அயோத்தியா காண்டம் |
| கம்ப.பாலகாண் | - கம்பராமாயணம் பாலகாண்டம் |
| திருச்.விருத். | - திருச்சந்த விருத்தம் |
| திருமா. | - திருமாலை |
| திருப்பா. | - திருப்பாவை |
| தொல். | - தொல்காப்பியம் |
| நன். | - நன்னூல் |
| நாச்.திரு. | - நாச்சியார் திருமொழி |
| நான்.திருவந். | - நான்காம் திருவந்தாதி |
| ப. | - பக்கம் |
| பக். | - பக்கங்கள் |
| பெரிய திருவந். | - பெரியதிருவந்தாதி |
| பெரியாழ்.திரு. | - பெரியாழ்வார் திருமொழி |
| பெரு.திரு. | - பெருமாள் திருமொழி |
| முத.திருவந். | - முதல் திருவந்தாதி |
| மூன்.திருவந். | - மூன்றாம் திருவந்தாதி |
| மேலது | - மேலே குறிப்பிட்டது |

# பொருளடக்கம்

# முன்னுரை

தமிழ் இலக்கிய வரலாற்றைச் சங்க காலம், சங்கம் மருவிய காலம், பக்தி இலக்கியக் காலம், காப்பியக் காலம், சிற்றிலக்கியக் காலம், மறுமலர்ச்சிக் காலம் என வகைப்படுத்துவர். இவற்றில் பக்தி இலக்கியக் காலம் தனித்ததோர் சிறப்பினைப் பெற்றதாகும். பக்தி இலக்கியக் கால இலக்கியங்களைச் சைவ இலக்கியம், வைணவ இலக்கியம் எனப் பிரிப்பர். திருமாலைச் சமயக் கடவுளாகக் கொண்ட சமயம் வைணவம். திருமாலின் அருளை முழுமையாகப் பெற்றவர்கள் ஆழ்வார்கள். இத்தகைய ஆழ்வார் பாசுரங்களில் காணப்பெறும் வைணவ சமயக் கருத்துகளைக் கொண்டு ந.சுப்புரெட்டியாரின் சொற்பொழிவு நூலான 'ஆழ்வார்களின் ஆராஅமுது' என்னும் நூல் திகழ்கிறது. இந்நூலில் செற்பொருள் விளக்கம், பல்வேறு விதமான கருத்து நயங்கள், பன்னூற் செய்திகள் ஆகியவற்றை எடுத்தாண்டுள்ளார்.

### ஆய்வுத் தலைப்பு

ந.சுப்புரெட்டியாரின் பல்துறையறிவை வெளிக்காட்டும் வகையில் **"ந.சுப்புரெட்டியாரின் பன்னோக்குத் திறன் (ஆழ்வார்களின் ஆராஅமுது)"** என்பது ஆய்வுத் தலைப்பாக அமைகிறது.

### ஆய்வு நோக்கம்

ந.சுப்புரெட்டியார் இயற்றிய சொற்பொழிவு நூலான ஆழ்வார்களின் ஆராஅமுது என்னும் நூலில் ஆழ்வார் பாசுரங்களில் இடம்பெறும் சொற்களுக்கான விளக்கம், பல்நயங்கள், வடமொழிப் புலமை, பன்னூற் புலமை ஆகியவற்றை வெளிக்காட்டுவது இவ்வாய்வின் நோக்கமாகும்.

## கருதுகோள்

ந.சுப்புரெட்டியாரின் சொற்பொழிவு நூலாகிய ஆழ்வார்களின் ஆராஅமுது என்ற நூலில் ஆழ்வார்களின் பாடல்களில் இடம்பெறக் கூடிய சொற்களுக்கான பொருள், பொருள் விளக்கம் ; கருத்துகள், எடுத்துக்காட்டுகள், இலக்கணக் குறிப்புகள் ஆகியவற்றை நயம்பட எடுத்துக்காட்டும் விதம் ; பல்வேறு துறைகளுள் உள்ள புலமை இவற்றை ஆராய முற்படுதல் இவ்வாய்வின் கருதுகோளாக அமைகிறது.

## ஆய்வு எல்லை

ந.சுப்புரெட்டியாரின் 'ஆழ்வார்களின் ஆராஅமுது' என்னும் நூல் முதன்மைச் சான்றாதாரமாகும் (Primary Sources). இவ்வாய்வுத் தொடர்பான பக்தி இலக்கிய நூல்கள், இலக்கண நூல்கள், திறனாய்வு நூல்கள், களஞ்சியம் ஆகியன துணைமைச் சான்றாதாரங்களாக (Secondary Sources) அமைகின்றன.

## ஆய்வு அணுகுமுறைகள்

'ந.சுப்புரெட்டியாரின் பன்னோக்குத் திறன் (ஆழ்வார்களின் ஆராஅமுது)' என்னும் இவ்வாய்வில் ஒவ்வொரு இயலையும் பகுத்து ஆராய முற்படும் நிலையில் பகுப்பாய்வு அணுகுமுறையும், ஒவ்வொரு இயலிலுள்ள பல்வேறு கூறுகளை விளக்க முற்படும் நிலையில் விளக்கவியல் அணுகுமுறையும், பல்வேறு நயமான கருத்துகளை எடுத்துக்காட்டும் நிலையில் அழகியல் அணுகுமுறையும் மேற்கொள்ளப் பட்டுள்ளன.

## ஆய்வுப் பகுப்பு

*இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக மூன்று இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளன. அவை,*

*1. சொற்பொருளும் சொற்பொருள் விளக்கமும்*

*2. பல்நயங்கள்*

*3. பல்துறைப் புலமை*

*என்பனவாகும்.*

## இயல் விளக்கம்

***'சொற்பொருளும் சொற்பொருள் விளக்கமும்'*** *என்பது முதலியலாகும். இதில் சொற்பொருள் தருதல், சொற்பொருள் விளக்கம் கூறல் முதலானவை விளக்கப்பெற்றுள்ளன.*

*இரண்டாவது இயலாகப்* ***'பல் நயங்கள்'*** *என்பது அமைகிறது. இவ்வியலில் எடுத்துக்காட்டு நயம், இலக்கண நயம் ஆகியவை குறித்து ஆராயப்பட்டுள்ளன.*

***'பல்துறைப் புலமை'*** *என்பது மூன்றாவது இயலாகும். இதில் வடமொழிப் புலமை, உவமை, பொருள் விளக்கம், பெயர் விளக்கம், பிறர் கருத்தை எடுத்துக்காட்டல், வினாவிடைப் பாங்கு, பன்னூற் புலமை, ஒப்புமை காட்டல், இலக்கணப் புலமை ஆகியவை விளக்கப்பெற்றுள்ளன.*

*முடிவுரையில் ஆய்வில் கண்ட முடிவுகள் இடம்பெற்றுள்ளன. ஆய்விற்குப் பயன்பெற்ற நூல்கள் துணைநூற்பட்டியலில் இடம் பெற்றுள்ளன.*

# சொற்பொருளும் சொற்பொருள் விளக்கமும்

*தமிழ் இலக்கியச் செய்யுட்களுக்குப் பொருளும் பொருள் விளக்கமும் இல்லாதிருப்பின் இலக்கியங்களின் அரிய கருத்துகளைப் பெற இயலாது. இலக்கியங்கள் நிலைபேறுடையதாகத் திகழ இலக்கியச் செய்யுட்களின் சொற்களை நன்கு ஆராய்ந்து அதன் உண்மைப் பொருளைக் கண்டு பொருள் கூறுதல் வேண்டும். இவ்வகையில் ந.சுப்புரெட்டியார், ஆழ்வார்களின் ஆராஅமுது என்ற நூலில் ஆழ்வார்கள் இயற்றிய பாசுரங்களிலுள்ள சொற்களுக்குப் பொருளும் பொருளுக்கான விளக்கத்தையும் எடுத்துரைத்துள்ளார். இவற்றைப் பற்றி அறிவது இவ்வியலின் நோக்கமாக அமைகிறது.*

**சொற்பொருள் தருதல்**

*இலக்கியப் பாசுரங்களில் இடம்பெற்றிருக்கும் சொற்களுக்குப் பொருள் உரைத்தல் அடிப்படைப் பண்புகளுள் ஒன்றாகும். "இம்மரபினைப் பின்பற்றும் போது சொற்களுக்கு வெறும் அகராதிப் பொருளை மட்டும் தராமல், நயப் பொருளையும் நுண்பொருளையும்"[1] தருதல் வேண்டும். "சொற்களின் பொருளை நன்கு விளக்கிச் செல்லுதல் ஆராய்ச்சி உலகிற்குப் புதிய ஒளி தரவல்லவை."[2] சொற்களுக்குப் பொருள் விளக்கம் கூறுவதன் மூலம் ஆசிரியரின் திறன் வெளிப்படும்.*

*பெரியாழ்வார், ஸ்ரீவில்லிபுத்தூரில் திருத்துழாய் பாத்தியமைத்தற்காக நந்தவனத்தைக் களைக்கொட்டு கொண்டு தோண்டுகிறார். அப்போது பெண்மகவு கிடைக்கிறது. இதனைக் கம்பர்,*

*'உழுகின்ற கொழு முகத்தின், உதிக்கின்ற கதிரின் ஒளி...'*

*(கம்ப.பாலகாண்.137)*

*என்ற பாடலை எடுத்துக்காட்டுமிடத்து "கதிர்-சூரியன்; புவிமடந்தை-*

பூமிதேவி ; உரு - திருவுருவம் ; புணரி - கடல்; இழிந்து - தாழ்வடைந்து."[3] என்றும்,

கோதை, தன் தந்தையாகிய பெரியாழ்வார் போன்று இயற்கை அழகுகளில் எல்லாம் கண்ணனைக் கண்டதாக,

'கொண்டல்தான் மால்வரைதான் மாகடல்தான் கூரிருள்தான்...'
(பெரிய திருவந்.49)

'பூவையும் காயாவும் நீலமும் பூக்கின்ற...' (பெரிய திருவந்.73)

என்ற பாடல்களைச் சுட்டுமிடத்து, "கொண்டல் - மேகம்; வரை- மலை; கூர் இருள் - செறிந்த இருள்; அறா - விட்டு நீங்காத ; கார்- கறுத்த ; பூவை - பூவைப்பூ ; காயா - காயாம்பூ ; நீலம் - கருநெய்தல்; காவிமலர்- செங்கழு நீர்ப்பூ; ஆவி - உயிர் ; பூரிக்கும் - பருத்து வளர்கிறது."[4] என்றும் பொருளுரைப்பர்.

கோதை, வேணுகோபாலன் தான் படரவேண்டிய கொள்கொம்பு என்று உணர்ந்த நிலையில் கழுத்தில் காறை என்ற அணியை அணிந்து தன் அழகைக் கண்ணாடியில் பார்த்து மகிழ்கிறாள். கை வளையல்களைக் குலுக்கிப் பார்த்துக் கொள்கிறாள். நீலநிறப் புடவையை உடுத்திக் கொள்கிறாள். கோவைப்பழம் போன்ற தன் சிவந்த வாயைக் கண்ணாடியில் பார்த்துத் திருத்திக்கொள்கிறாள். மணிவண்ணனின் பெயரைப் பிதற்றிக் கொண்டிருக்கிறாள். இவற்றையெல்லாம் கண்ட பெரியாழ்வார் திடுக்கிட்டுத் தன் அனுபவத்தை நற்றாய் நிலையில்,

'காறை பூணும் ; கண்ணாடி காணும் தன்...' (பெரியாழ்.திரு.293)

என்று எடுத்துரைக்குமிடத்து, "காறை - கழுத்தணி ; கூறை - ஆடை;

அயர்க்கும் - மறக்கும் ; தேறி - தெளிந்து ; மாறு இல் - ஒப்பற்ற ; மால்-மோக"[5] என்றும்,

ஆண்டாள், கண்ணன் தன்னிடத்துக் கலவி செய்யாத நிலையில் அவன் பிரிவைத் தாங்க மாட்டாது, பிரிந்திருப்பவர்களைக் கூட்டவல்ல காமனை நோக்கி,

'வானிடை வாழும் அவ் வானவர்க்கு...' (நாச்.திரு.5)

என்று இரந்து வேண்டும் பாடலில் "வானவர் - தேவர்கள்; வேள்வி - யாகம் ; வகுத்த - கொடுத்த ; அவி - அவிசு ; ஊனிடை - மேனியில் ; உத்தமன் - புருடோத்தமன் ; உன்னித்து - ஆதரவுடன்"[6] என்றும் சொற்பொருள்களைக் காட்டுவர்.

கண்ணபிரான், இரவின் முற்பகுதியில் பெண்களுடன் புணர்ந்து பிற்பகுதியில் உறங்கக்கூடியவன். இதனால் கதிரவன் உதயமாகும் அளவும் கண் விழிக்கமாட்டான் என்று நினைத்து ஆய்ச்சியர்கள் பொய்கைக்கு நீராட வருகின்றனர். கண்ணன், இருளைப் போன்ற மேனியனாதலால் அப்பெண்களின் நிழலைப் பற்றிக் கொண்டு அவர்களுக்கு முன்பு பொய்கையைச் சேர்கின்றான். ஆய்ச்சியர்கள் அவன் வந்ததை அறியவில்லை. ஆய்ச்சியர்கள் ஆடைகளையும் அணிகளையும் களைந்து கரையில் வைத்துவிட்டு நீரில் மூழ்குகின்றனர். அந்நிலையில் கண்ணன் அவற்றையெல்லாம் வாரிச் சுருட்டிக் கொண்டு குருந்த மரத்தின் மீது ஏறி மறைந்து நிற்கின்றான் என்பதை மையமிட்டதாக அமையும்,

'கோழி அழைப்பதன் முன்னம்...' (நாச்.திரு.21)

என்ற பாடலின் சொற்பொருளாக, "குடைந்து - மூழ்கி; ஆழியன் - சூரியன் ; அரவணை - பாம்புப் படுக்கை"[7] என்றும்,

ஆண்டாளின் கூடல் இழைத்தல் பாடலான,

'காட்டில் வேங்கடம் கண்ண புரநகர்...' (நாச்.திரு.32)

என்பதில் "வாட்டம் - மனக்குறை ; ஓட்டரா - ஓடி ; ஓட்டம் தரா - ஓட்டரா"[8] என்றும்,

ஆண்டாள், கண்ணனை அடைய வேண்டிக் குயிலை வேண்டுவதாக அமையும்,

'புன்னை குருக்கத்தி ஞாழல் செருந்திப்

பொதும்பினில் வாழும் குயிலே!' (நாச்.திரு.42:5-6)

என்பதில் "ஞாழல் - தாழை ; பொதும்பு - பொந்து"[9] என்றும் பொருள் விளக்கம் தருவர்.

ஆண்டாள், ஆற்றாமையுடன் காணப்படுகிறாள். தன்னைப் பிரிந்து சென்றபோது கார்காலத் தொடக்கத்தில் வருவதாகச் சொல்லிச் சென்றது நினைவிற்கு வருகிறது. கார்காலமாதலால் மேகவண்ணன் மேகங்களுடன் வந்திருக்கக் கூடும் என்று நினைக்கின்றாள். மேகத்திடம், பெருமாளைப் பற்றி வினவிய நிலையில் மறுமொழி கூறவில்லை. தன் நிலையை அவனிடம் சென்று உரைக்குமாறு வேண்டுகிறாள்.

'என்னாகத் திளங் கொங்கை விரும்பித்தாம் நாள்தோறும்...'

(நாச்.திரு.77)

என்ற பாடலின் சொற்பொருளாக, "ஆகம் - மார்பு ; தாம் - எம்பெருமான்; புல்குதல் - அணைதல் ; புரிவுடைமை - ஆசையுடைமை"[10] என்பதையும்,

ஆண்டாள், பெருமாளிடத்து மேகத்தைத் தூது விடுத்தலாக அமையும்,

*'உலங்குண்ட விலங்கனி போல் உள்மெலியப் புகுந்தென்னை*

*நலங்கொண்ட நாரணற்கென் நடலைநோய் செப்புமினே'*

*(நாச்.திரு.79:3-4)*

*என்பதில் "உலங்கு - பெரும் கொசுக்கள் ; நடலை - நிற்பது ; இருப்பது, விழுவது, எழுவதாய்ப் படுகிறநோய்"[11] என்பதையும் ஆண்டாள், ஆற்றாத நிலையில் திருமலையில் வாழும் மதயானைகள் போல் கிளம்பும் முகில்களிடம் கூறும்*

*'மதயானை போலெழுந்த மாமுகில்காள் வேங்கடத்தை...'*

*(நாச்.திரு.82)*

*என்பதில் "பதி - இருப்பிடம் ; தான் - எம்பெருமான் ; வதை- கொலை; மதியார் - மதிக்க மாட்டார்கள்"[12] என்பதையும் சொற்பொருள்களாகக் கூறியுள்ளார்.*

*ஆண்டாள், கண்ணனிடத்துக் கொண்ட காதல் முற்றிய நிலையில் கூறும்,*

*'உள்ளே உருகி நைவேனை...' (நாச்.திரு.131)*

*என்பதில் "நைதல் - வருந்துதல்; கொள்ளி - அபகரித்துக் கொண்டவன்; குறும்பன் - மகளிரிடம் வம்பு செய்பவன்; கிழங்கு - வேர்; அள்ளிப் பறித்திட்டு-பற்றிப்பிடுங்கி; அழல்-துக்கம்,"[13]*

*திருவரங்கப் பெருமாளின் மார்பு, திருப்பாணாழ்வாரை ஆட்கொண்டதைக் கூறும்,*

*'பாரம்ஆய, பழவினை பற்றுஅறுத்து என்னைத்தன்*

*வாரமாக்கி வைத்தான் வைத்ததன்றி யென்னுள் புகுந்தான்'*

*(அமல.பதி.5:1-2)*

*என்னும் பாடலில் "பாரமாய பழவினை - பொறுக்க முடியாத*

*சுமையாகவுள்ள நெடுங்கால வினைகள் ; பற்று - சம்பந்தம் ; வாரம் - அன்பு,"*[14]

*பெருமானின் திருக்கழுத்தின் அழகில் ஆட்பட்ட திருப்பாணாழ்வார்,*

*'அண்டரண்ட பகிரண்டத்து, ஒரு...' (அமல.பதி.6)*

*என்னும் பாடலில் "அண்டர் - தேவர்கள் ; அண்டம் - உலகங்கள் ; பகிரண்டம் - அண்டங்கட்கு அப்பாலுள்ள உலகங்கள் ; கண்டம் - திருக்கழுத்து,"*[15]

*திருப்பாணாழ்வார், பெருமாளின் அனைத்து உறுப்புகளிலும் உள்ளத்தைப் பறிகொடுத்து உள்ளம் மகிழ்ச்சியடைந்த பெருமையை,*

*'ஆலமா மரத்தின் இலைமேல், ஒரு பாலகனாய்...' (அமல.பதி.9)*

*என்று எடுத்துரைப்பதில் "பாலகன் - குழந்தை ; ஞாலம் - உலகம்; கோலம் - அழகிய ; ஆரம் - மாலை ; தாமம் - மாலை ; எழில் - அழகு,"*[16]

*பொய்கையாழ்வாரின்,*

*'வையம் தகளியா வார்கடலே நெய்யாக...' (முத.திருவந்.1)*

*என்னும் பாடலில் "தகளி - அகல் ; வார் - நீண்ட ; வெய்ய - வெப்பமான ; கதிரோன் - பகலவன் ; செய்ய - சிவந்த சுடராழி ; யான் - ஒளி வீசும் சக்கரத்தையுடையவன் ; இடர்ஆழி - துன்பக் கடல்,"*[17]

*பூதத்தாழ்வாரின்,*

*'அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக,*

*இன்புருகு சிந்தை யிடுதிரியா, - நன்புருகி' (இரண்.திருவந்.1:1-2)*

*என்பதில், "ஆர்வம் - விருப்பம் ; நன்பு - ஆன்மா,"*[18]

பேயாழ்வாரின்,

'திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன் திகழும்...'

(மூன்.திருவந்.1)

என்பதில் "திரு - இலக்குமி ; அருக்கன் - சூரியன் ; செருகிளரும் - போரில் வல்லமை காட்டும் ; ஆழி - சக்கரம் ; ஆழிவண்ணன் - கடல் நிறத்தவன்"[19] ஆகியனவற்றைப் சொற்பொருள்களாகக் கூறியுள்ளார்.

பொய்கையாழ்வாரின்,

'நீயும் திருமகளும் நின்றாயால், குன்றெடுத்து...'

(முத.திருவந்.86)

என்னும் பாடலில் "பாயும் - சொரிகின்ற ; பாயும்பனி - மழை ; காமர்பூ - விரும்பத்தக்க ; வாசல்கடை - திருவாயிலுக்கு வெளியே ; உள்புகா - உள்ளே புகாமலும் ; இடைகழி - நடுக்கட்டு ; பற்றி - விரும்பி"[20] என்பதும்,

பேயாழ்வாரின்,

'விண்ணகரம் வெஃகா விரிதிரைநீர் வேங்கடம்...'

(மூன்.திருவந்.62)

என்பதில் "மண்நகரம் - பூமியிலுண்டான வைகுந்த மாநகர் போன்ற ; வேளுக்கை - கச்சியிலுள்ள ஆளழகிய சிங்கர் சந்நிதி ; மண் அளந்த - பூமியில் உண்டான,"[21]

பேயாழ்வாரின்,

'மண்ணகலம் கீண்டங்கோர் மாதுகந்த மார்வதற்கு'

(மூன்.திருவந்.54:3)

என்னும் பாடலில் இடம்பெறும் மாது என்பதற்கு, "பெரியபிராட்டியார்,"[22]

*பூதத்தாழ்வாரின்,*

*'கதவிக் கதஞ்சிறந்த கஞ்சனை முன் காய்ந்து,*

*அதவிப்போர் யானை ஒசித்து, - பதவியாய்'*

*(இரண்.திருவந்.89:1-2)*

*என்பதில் "கதவி - கோபித்து; கதம் - சினம் ; அதவி - கொன்று"*[23] *ஆகியவற்றைச் சொற்பொருள்களாக இடம்பெறச் செய்துள்ளார்.*

*பேயாழ்வாரின்,*

*'மாவலனாய் கீண்ட மணிவண்ணன், - மேவி' (மூன்.திருவந்.42:2)*

*என்பதில் இடம்பெறும் மா என்பதற்கு, "கேசி என்னும் அசுரன்,"*[24]

*'குணிலை விளங்கனிக்குக் கொண்டெறிந்தான் வெற்றி'*

*(மூன்.திருவந்.60:3)*

*என்பதில் இடம்பெறும் குணில் என்பதற்கு "எறிதடி,"*[25]

*பொய்கையாழ்வாரின்,*

*'ஊரும் வரியரவம் ஒண்குறவன் மால்யானை...'*

*(முத.திருவந்.38)*

*என்னும் பாடலில் இடம்பெறும் "ஊரும் - திரியும் ; வரி - கோடு ; அரவம் - பாம்பு; ஒண் - அழகிய ; மால் - பெரிய ; மணி - மாணிக்கம்; கார் - மேகம்; எம் - எங்களுடையவன் ; மாலது - எம்பெருனுடைய,"*[26]

*பொய்கையாழ்வாரின்,*

*'பெருவில் பகழிக் குறவர்கைச் செந்தீ...' (முத.திருவந்.40)*

*என்னும் பாடலில் "பகழி - அம்பு ; செந்தீ - தீவட்டி ; புனம் - கொல்லை ; வேழம் - யானை ; விசும்பு - ஆகாயம் ; மீன் - நட்சத்திரம்; மேல் - முன் ஒரு காலத்தில் ; அசுரர் கோன் - இரணியன் ; உகந்தான்- மகிழ்ந்தான் ; குன்று - திருமலை,"*[27]

பூதத்தாழ்வாரின்,

'பெருகு மதவேழம் மாப்பிடிக்கு முன்னின்று...'

(இரண்.திருவந்.75)

என்னும் பாடலில் "வேழம் - யானை ; பிடி - பெண்யானை ; இருகண்- இரண்டு கணுக்களையுடைய ; வண்ணன் - நிறத்தன் ; வரை- மலை,"[28]

திருமங்கையாழ்வார் திருப்பிரிதி என்ற திவ்விய தேசத்தை வர்ணிக்கும்,

'வரைசெய் மாக்களி றிளவெதிர் வளர்முளை...'

(பெரிய திருவந்.15)

என்னும் பாடலில் "வரைசெய் - மலைபோன்ற ; களிறு - ஆண் யானை; வெதிர் - மூங்கில் ; வளர்முளை - வளரும் இள மூங்கில் ; அளை- முழைஞ்சு; பிரசவாரி - தேன் வெள்ளம் ; அருள் செயும்- கொடுக்கும்,"[29]

ஆண் யானை, தன் பெண் யானைக்குத் தேன் தோய்ந்த மூங்கிற் குருத்தைக் கொடுத்து மகிழ்விக்கின்றது. இக்காட்சியைக் கம்பநாடன், சீதைக்கு இராமன் வாயிலாகக் காட்டுமிடத்து,

'உருகு காதலின் தழைகொண்டு...' (கம்ப.அயோ.காண்.10)

என்னும் பாடலில் "முருகு - மணம் ; நாறு - வீசுகின்ற ; முழை - கல் இடுக்கு ; பெருகு சூல் - முதிர்ந்த கருப்பம் ; மருப்பு - தந்தம்,"[30]

பூதத்தாழ்வாரின்,

'போதறிந்து வானரங்கள் பூஞ்சுனைபுக்கும், ஆங்கலர்ந்த...'

(இரண்.திருவந்.72)

என்பதில் "போது - விடியற்காலம் ; போது - மலர் ; அரிந்து - கொய்து; பேர் - திருநாமம்."[31]

*சித்திரகூடக் குரங்குகளின் செயல்களைக் கம்பநாடன் எடுத்துக்காட்டும்,*

*'இடுகு கண்ணினர், இடர் உறு...' (கம்ப.அயோ.காண்.30) என்னும் பாடலில் "இடுகு - இடுகிய ; இடர் - துன்பம் ; ஏக - செல்ல; நெடுகு கூனல் - மிக்க கூனையுடைய ; மாதவர் - தவசிகள்,"[32]*

*பேயாழ்வாரின்,*

*'புகுமதத்தால் வாய்பூசிக் கீழ்தாழ்ந்து அருவி...' (மூன்.திருவந்.70) என்பதில் "புகு - வாயில் புகும் ; வாய் பூசுதல் - கொப்பளித்தல் ; மிகுமதம்- அதிக மதம் ; விறல் - மிடுக்கு ; களிறு - ஆண் யானை."[33]*

*'களிறு முகில்குத்தக் கையெடுத் தோடி...' (மூன்.திருவந்.71) என்பதில் "களிறு - ஆண் யானை ; முகில் - மேகம் ; கை - துதிக்கை ; ஒளிறு - விளங்குகின்ற ; ஒசி - முறிக்கின்ற ; குழகன்று - இளங்கன்று (வத்சலாசுரன்),"[34]*

*'புரிந்து மதவேழம் மாப்பிடியோ டூடி...' (மூன்.திருவந்.45) என்பதில் "வேழம் - யானை ; பிடி - பெண் யானை ; கோடு - கொம்பு; மண் - பூமி (ப்பிராட்டி),"[35]*

*'தெளிந்த சிலாதலத்தின் மேலிருந்த மந்தி,...' (மூன்.திருவந்.58) என்பதில் "சிலாதலம் - கற்பாறை ; மந்தி - பெண் குரங்கு ; கடுவன்- ஆண் குரங்கு ; மதியம் - திங்கள்"[36] ஆகியவற்றைச் சொற்பொருள்களாக எடுத்தாண்டுள்ளார்.*

*மூன்று ஆழ்வார்களின் முதிர்ந்த பக்திநிலையில் முமுட்சுகள் தன் முனைப்பை அகற்றி இறைவனுக்கு அடிபணிந்து இறைவனுடன்*

நிரந்தரத் தொடர்பு கொள்வதற்குத் தயாராகின்றன என்பதைக் குறிப்பிடும்போது "முமுட்சுகள் - மோட்சத்தில் விருப்பமுடையவர்கள்,"[37]

பக்தர்கள் எவ்வுருவத்தை விரும்புகின்றார்களோ அவ்வுருவத்தையே இறைவன் தன் உருவமாகக் கொள்கின்றான் என்பதை எடுத்துரைக்கும் பொய்கையாழ்வாரின்,

'தமருகந்த தெவ்வுருவம் அவ்வுருவம் தானே
தமருகந்த தெப்பேர்மற் றப்பேர், - தமருகந்து'

(முத.திருவந்.44:1-2)

என்பதில் "தமர்-அடியார்கள் ; உகந்தது - விரும்பியது ; பேர் - திருநாமம்,"[38]

'ஒருவனையே நோக்கும் உணர்வு' (முத.திருவந்.67:4)

என்னும் பாடலில் "உணர்வு - ஞானம் ; நோக்கும் - சென்று பற்றும்,"[39]

'உணர்வாரா ருன்பெருமை? யூழிதோ றூழி,...' (முத.திருவந்.68)

என்பதில் "ஊழிதோறு ஊழி - காலம் உள்ள அளவும் ; பால் - திருப்பாற்கடல்,"[40]

கடல்கடைந்த புராணக் கதையை எடுத்துரைக்கும்,

'ஆலமர் வென்றி யடுகளத்துள் அஞ்ஞான்று,...'

(முத.திருவந்.81)

என்பதில் "வரை - மந்தரமலை ; நீள் அரவு - வாசுகி ; தொல் - பழமையான ; பற்றி - அள்ளி எடுத்துக் கொண்டு போய் ; நரகு - சம்சாரம் ; படை - சாதனம்,"[41]

இறைவனுடைய பெருமையை வெளிப்படுத்தும் உலகளந்த கதையைக் கூறும்,

'அடியும் படிகடப்பத் தோள்திசைமேல் செல்ல

முடியும் விசும்பளந்த தென்பர்'

(முத.திருவந்.17:1-2)

என்பதில் "படி - பூமி ; முடி - கிரீடம் ; விசும்பு - ஆகாயம்,"[42]

பேயாழ்வாரின்,

'கழலொன் றெடுத்தொருகை சுற்றியோர் கைமேல்...'

(முத.திருவந்.48)

என்னும் பாடலில் "கழல் - திருவடி ; ஆழி - சக்கரம்,"[43]

பொய்கையாழ்வாரின்,

'வானாகித் தீயாய் மறிகடலாய் மாருதமாய்...' (முத.திருவந்.92) என்னும் பாடலில் "வான் - ஆகாயம் ; மறிகடல் - அலை மறிந்து விழுகிற கடல் ; மாருதம் - காற்று ; ஆய்ச்சி - இடைச்சி ; நிறையுமோ- நிறையுமோ,"[44]

'பெயரும் கருங்கடலே நோக்குமாறு, ஒண்பூ...' (முத.திருவந்.67) எனத் தொடங்கும் பாடலில் "பெயரும் - பொங்கிக் கிளருகின்ற ; ஒண்பூ- தாமரைப் பூ ; நோக்கும் - கண்டு மலரும் ; தருமன் - எமன் ; உணர்வு - ஞானம் ; நோக்கும் - சென்றுபற்றும்,"[45]

குலசேகரப் பெருமாளின்,

'தொக்கிலங்கியாறெல்லாம் பரந்தோடித் தொடுகடலே...'

(பெரு.திரு.8)

என்பதில் "தொக்கு - திரண்டு ; பரந்து - பரவி ; தொடுகடல் - ஆழ்ந்த கடல் ; புறம் - மற்றோரிடத்தே ; புக்கு - என் நெஞ்சினுள் ; சீர் - கல்யாண குணங்கள்"[46] என்பனவற்றைச் சொற்பொருள்களாக இயம்பியுள்ளார்.

பொய்கையாழ்வார், எம்பெருமானை அறியும் அறிவே அறிவு என்பர். இந்நிலைக்குக் காரணமாக இருக்கும் உறுதியான நம்பிக்கையை எடுத்துரைக்கும்போது,

'உளன் கண்டாய் நன்னெஞ்சே! உத்தமன் என்றும்...'

(முத.திருவந்.99)

என்பதில் "உள்ளுவார் - நினைப்பவர்கள் ; வெள்ளம் - கடல் ; மேயான்- வசிக்கின்றான் ; ஓர் - அறிந்துகொள்,"[47]

'புந்தியால் சிந்தியா தோதி உருவெண்ணும்,

அந்தியா லாம்பயனங் கென்?' (முதல்.திருவந்.33:3-4)

என்பதில் "புந்தி - புத்தி ; அந்தி - சந்தியா வந்தனம்,"[48]

'சென்றால் குடையாம் இருந்தால்சிங் காசனமாம்...'

(முத.திருவந்.53)

என்னும் பாடலில் "மரவடி - பாதுகை ; புணை - மெத்தை ; அணி விளக்கு - மங்களதீபம் ; பூம்பட்டு - திருப்பரிவட்டம் ; அணை - தலையணை,"[49]

பொய்கையாழ்வாரின் கவிதையைத் தமிழ்ப் புலவர்கள் 'பொய்கையார் வாக்கு' என்னுமிடத்து வைணவப் பெருமக்கள்,

'வருந்தும் புறவிருள் மாற்றஎம் பொய்கைப்பி ரான்மறையின்

குருத்தின் பொருளையும் செந்தமிழ் தன்னையும் கூட்டி, ஒன்ற'

(இராமா.நூற்.8:1-2)

எனப் போற்றுமிடத்து "மறையின் குருத்து - வேதசாரம்"[50] ஆகியனவற்றைச் சொற்பொருளாக அமைத்துள்ளார்.

பூதத்தாழ்வாரின்,

'இன்றா வறிகின்றே னல்லேன், இருநிலத்தை...'

(இரண்.திருவந்.87)

என்னும் பாடலில் "கருக்கோட்டியுள் - கருப்பத் தானத்துள் ; இருநிலம்- விசாலமான நிலம் ; திறம் - தன்மை,"[51]

'திருமங்கை நின்றருளும் தெய்வம்நா வாழ்த்தும்,...'

(இரண்.திருவந்.57)

என்னும் பாடலில் "திருமங்கை - பெரியபிராட்டியார் ; நின்றருளும் - நித்திய வாசம் செய்யும் ; இருதடக்கை - நீண்ட கைகள் ; பாதம் - திருவடிகள்,"[52]

'நகரிழைத்து நித்திலத்த நாண்மலர்கொண்டு, ஆங்கே...'

(இரண்.திருவந்.4)

என்னும் பாடலில், "நகர் இழைத்து - என் நெஞ்சை அவனுக்கு உறைவிடமாக்கி ; நித்திலம் - முத்து ; மணிவயிரம் - நல்ல மாணிக்கம்; நிகர் இல்லா - ஒப்பில்லாத ; கமலம் - தாமரை ; பனி மலராள் - பெரிய பிராட்டி,"[53]

'உகந்துள்ளன வாங்கி ஒளிநிறங்கொள் கொங்கை...'

(இரண்.திருவந்.8)

என்னும் பாடலில் "உகந்து - விரும்பி ; வாங்கி - தூக்கி எடுத்து ; அன்று - (முலை) தந்த அக்காலத்தில்; பண்பு - (இங்கு) எளிமை; உகந்து- மகிழ்ந்து ; ஆவி - உயிர்,"[54]

'ஓத்தின் பொருள்முடிவும் இத்தனையே உத்தமன்பேர்...'

(இரண்.திருவந்.39)

என்பதில் "ஏழைகாள் - அறிவுக் கேடர்களே ; ஒத்து - வேதம்; சுருக்கு- சாரம்,"[55]

கசேந்திர மோட்சம் பற்றிக் கூறும்,

'அரிய தெளிதாகும் ஆற்றலால் மாற்றி...' (இரண்.திருவந்.22)

என்பதில் "ஆற்றல் - தன் சக்தி ; மாற்றி - விலக்கி ; பெருக - மிகவும் உற்சாகமாக ; கோடு - கொம்பு ; கோடு - பொய்கைக் கரை ; மா - சிறந்த ; தாழ்ந்து - வணங்கி,"[56]

'நினைப்பன் திருமாலை நீண்டதோள் காண,....'

(இரண்.திருவந்.42)

என்னும் பாடலில் "நீண்ட தோள் - சிறந்த தோள் ; பிறப்பு - யோனிப் பிறப்பு ; மனைப்பால் - சம்சாரத்தில் பிறந்தவர்கள் ; துறந்தார் - வெறுப்பார்,"[57]

'பணிந்தேன் திருமேனி பைங்கமலம் கையால்...'

(இரண்.திருவந்.65)

என்னும் பாடலில் "பணிந்தேன் - சேவித்தேன்; பைங்கமலம்- அழகிய தாமரை ; சேவடி - செவ்விய அடி ; அணிந்தேன்- சமர்ப்பித்தேன் ; புரிந்து - விரும்பி ; புகலிடம் - பரமபதம்,"[58]

'பகற்கண்டேன் நாரணனைக் கண்டேன், கனவில்...'

(இரண்.திருவந்.81)

என்பதில் "பகல் - நல் விடிவு ; மீண்டு - இன்னமும் ; மிக மெய்யே - மிகவும் நேரில் ; ஊன் - மாமிசம் ; நேமி - சக்கரம் ; வான்- பரமபதம்,"[59]

'கோல்தேடி யோடும் கொழுந்ததே போன்றதே'

(இரண்.திருவந்.27:3)

*என்னும் பாடலில் "கோல் - கொழுகொம்பு ; கொழுந்து - (இங்கே) கொடி,"*[60]

*எம்பெருமானை அடையப் பக்திநெறி சிறந்த வழியென்று கூறும்,*

*'தாமுளரே தம்முள்ளம் உள்ளுளதே, தாமரையின்...'*

*(இரண்.திருவந்.21)*

*என்னும் பாடலில் "தாம் - சேதநர்கள் ; ஏத்தும் பொழுது - புகழ்வதற்கேற்ற காலம் ; திருமருவு தாள் - அழகிய திருவடிகள் ; செவ்வே - நேராக"*[61] *ஆகியனவற்றை இடம்பெறச் செய்துள்ளார்.*

*பொய்கையாழ்வாரின்,*

*'நாவாயி லுண்டே நமோநார ணாஎன்று...' (முத.திருவந்.95)*

*என்னும் பாடலில் "ஓவாது - விட்டு விட்டுச் சொல்லாமல் ; நமோ நாரண - எட்டு எழுத்து மந்திரம் ; மூவாத - கிழத்தன்மையற்ற ; மாகதி- மோட்சம் ; தீகதி - கேடுபயக்கும் வழி,"*[62]

*'முனியாது மூரித்தாள் கோமின், - கனிசாய' (முதல்.திருவந்.87:2)*

*என்னும் பாடலில் "முனியாது- சினவாமல்; மூரித்தாள் - உறுதியான தாழ்ப்பாள் ; கோமின் - பூட்டுங்கள்,"*[63]

*'அன்பாழி யானை யணுகென்னும், நா அவன்றன்...'*

*(முத.திருவந்.72)*

*என்பதில் "அன்பு - பக்தி; ஆழியான் - திருமால் ; அணுகு - கிட்டி, அநுபவி; பரவி - பேசி; ஏத்து- துதி"*[64] *என்பனவற்றைச் சொற்பொருள்களாக அமைத்துள்ளார்.*

*பூதத்தாழ்வாரின்,*

*'அருள்புரிந்த சிந்தை அடியார்மேல் வைத்து...'*

*(இரண்.திருவந்.59)*

*எனத் தொடங்கும் பாடலில் "சிந்தை - திருவுள்ளம் ; பொருள்தெரிந்து- பொருளற்ற எங்களைப் பொருளாகப் பற்றி ; காண்குற்ற அப்போது- கடாட்சித்த காலத்தில்; இருள்திரிந்து - அஞ்ஞானம் மாறி; ஒண்கமலம்- அழகிய திருவடிகளை ; ஓர்ந்து - மெய்ப்பித்து ; என்னை- ஆன்மாவை; ஒக்கினேன் - சமர்ப்பித்தேன்,"[65]*

*பூதத்தார் என்றும் பூதயோகி என்றும் அழைக்கும் பூதத்தாழ்வாரைத் திருவரங்கத்தமுதனார் போற்றும்,*

*'இறைவனைக் காணும் இதயத் திருள்கெட, ஞானமென்னும்...'*

*(இராமா.நூற்.9)*

*என்னும் பாடலில் "காண- நேரில்காண; இருள்-அஞ்ஞானம்; ஞானம்- பரஞானம்; நிறை விளக்கு- பூரண தீபம்; பூதம்- பூதத்தாழ்வார்,"[66]*

*பேயாழ்வாரின்,*

*'இறையாய் நிலனாகி எண்டிசையும் தானாய்,*
*மறையாய் மறைப் பொருளாய் வானாய் - பிறைவாய்ந்த'*

*(மூன்.திருவந்.39:1-2)*

*என்பதில் "இறை - தலைவன் ; மறை - வேதம் ; பிறை - இளஞ்சந்திரன்,"[67]*

*'அறிவென்னும் தாள்கொளுவி ஐம்புலனும் தம்மில்*
*செறிவென்னும் திண்கதவம் செம்மி - மறையென்றும்'*

*(மூன்.திருவந்.12:1-2)*

என்பதில் "தாள் - தாழ்ப்பாள் ; கொளுவி - பூட்டி; தம்மில் - தமக்குள்; செறிவு - அடக்குதல் ; திண் - வலிவான ; செம்மி- இறுக அடைத்து,"[68]

'ஓர்த்த மனத்தராய் ஐந்தடக்கி யாராய்ந்து,

பேர்த்தால் பிறப்பேழும் பேர்க்கலாம் - கார்த்த'

(மூன்.திருவந்.79:1-2)

என்னும் பாடலில் "ஓர்த்தமனம் - அநுசந்திக்கின்ற மனம் ; பேர்த்தால்- சம்சாரத்தினின்றும் நெஞ்சைத் திருப்பிக் கொண்டால் ; பேர்க்கலாம்- தொலைத்து விடலாம்,"[69]

'அரணாம் நமக்கென்றும் ஆழி வலவன்...' (மூன்.திருவந்.78)

எனத் தொடங்கும் பாடலில் "அரண்ஆம் - இரட்சகனாக இருப்பவன்; ஆழிவலவன் - திருவாழியையுடையவன் ; முரன் - ஓர் அசுரன் ; நாள்- ஆயுள் ; மொய்ம்பன் - மிடுக்கையுடையவன் ; கதி - ஞானம் ; நிலை- ஆசாரம் ; பிறப்பு - பிறப்பு ; கதி - உபாயம் ; ஓர்த்து - நன்றாக அறிந்து கொண்டு ; ஓது - அநுசந்தி,"[70]

'செம்மையா லுள்ளுருகிச் செவ்வனே நெஞ்சமே

மெய்ம்மையே காண விரும்பு' (மூன்.திருவந்.22:3-4)

என்பதில் "செம்மையால் - முறைப்படி ; உள்உருகி - உருக்கத்துடன் ; மெய்ம்மையே - உள்ளபடியே ; காண - சேவிக்க ; விரும்பு - ஆசைப்படு,"[71]

'பொருப்பிடையே நின்றும் புனல்குளித்தும், ஐந்து

நெருப்பிடையே நிற்கவும்நீர் வேண்டா, - விருப்புடைய'

(மூன்.திருவந்.76:1-2)

என்பதில் "பொருப்பு - மலை ; புனல் - நீர்நிலை ; ஐந்து நெருப்பு - பஞ்சாக்கினி,"[72]

'வெஃகாவே சேர்ந்தானை மெய்ம்மலர்த்தூய்க் கைதொழுதால்,

அஃகாவே தீவினைகள் ஆய்ந்து' (மூன்.திருவந்.76:3-4)

என்பதில் "வெஃகா - சொன்ன வண்ணம் செய்த பெருமாள் சந்நிதி ; அஃகாவே - அகன்றோடிவிடும்,"[73]

'திருமா மணிவண்ணன் செங்கண்மால், எங்கள்

பெருமான் அடிசேரப் பெற்று' (மூன்.திருவந்.59:3-4)

என்பதில் 'மாமணி - நீலமணி ; அடி - திருவடி,"[74]

'எழில்கொண்டு மின்னுக் கொடியெடுத்து, வேக...'

(மூன்.திருவந்.86)

என்னும் பாடலில் "எழில் - அழகு; மின்னுக்கொடி - மின்னற்கொடி; அன்ன - போன்ற,"[75]

'கலந்து மணியிமைக்கும் கண்ணா, நின் மேனி...' (மூன்.திருவந்.87)

என்னும் பாடலில் "இமைக்கும் - பிரகாசிக்கும் ; நலம் - அழகு ; கொந்தின்வாய்- பூங்கொத்திலிருந்து ; அறையும் - ஒலிக்கும் ; தண் - குளிர்ந்த,"[76]

'தேசும் திறலும் திருவும் உருவமும்' (மூன்.திருவந்.10:1)

என்பதில் "தேசு - தேஜஸ் ; திறல் - திறமை ; திரு - ஐசுவரியம்"[77] என்பனவற்றைச் சொற்பொருள்களாக எடுத்தாண்டுள்ளார்.

*திருமழிசையாழ்வாரின்,*

*'குலங்களாய ஈரிரண்டில், ஒன்றிலும் பிறந்திலேன்'*

*(திருச்.விருத்.90:1)*

*என்பதில் "ஈரிரண்டு - நான்கு,"*[78]

*'வெற்பென்று வேங்கடம் பாடினேன், வீடாக்கி'*

*(நான்.திருவந்.40:1)*

*என்பதில் "வெற்பு - மலை ; வீடு - மோட்சம்,"*[79] *சொற்பொருள்களாக அமைந்துள்ளன.*

*'நிற்கின்ற தெல்லாம் நெடுமாலென் றோராதார்,*

*கற்கின்ற தெல்லாம் கடை' (நான்.திருவந்.54:3-4)*

*என்பதில் "ஓராதார் - அறியாதவர்கள் ; கடை - கீழானது,"*[80]

*'மறம்துறந்து வஞ்சமாற்றி யைம்புலன்க ளாசையும்*

*துறந்து, நின்க ணாசையேதொ டர்ந்து நின்ற நாயினேன்'*

*(திருச்.விருத்.98:1-2)*

*என்பதில் "மறம் - கோபம் ; துறந்து - ஒழித்து ; நாயினேன் - அடியேன்,"*[81]

*'இயக்கு அறாத பல் பிறப்பில், என்னை மாற்றி இன்று வந்து...'*

*(திருச்.விருத்.120)*

*என்னும் பாடலில் "இயக்கு - தொடர்ச்சி ; மற்றி - மாற்றுகைக்குத் திருவுள்ளம் பற்றி ; உயக்கொள் - உய்விக்கும் ; நண்ணி - நெருங்கி ; தன்னிலாய என்னுள் - தன்னுடன் ஒன்றி நிற்கும் என்னுள் ; மயக்கினான் - கலந்தான் ; இயக்கு - பிணைப்பு,"*[82]

வைணவர்கள் இறைவனை அடைதலை வீடுபேறு, மோட்சம் என்று கருதுவர். வைணவத் தத்துவப்படி இறைவன் தன்னை அடைவதற்கு வழியாகவும் பலனாகவும் இருக்கிறான் என்பதைக் கூறும்,

'மெய்ப்பொருள்தான் வேத முதற்பொருள்தான், விண்ணவர்க்கு'

(நான்.திருவந்.13:3)

என்பதில் "மெய்ப்பொருள் - உண்மையான வழி,"[83]

'.........நெடுமாலை - என்றும்

திருவிருந்த மார்பன் சிரீதரனுக் காளாய்' (நான்.திருவந்.9:2-3)

என்பதில் "நெடுமால் - நாராயணன்; திரு - இலக்குமி; சிரீதரன்- இலக்குமியை மார்பில் தரித்தவன் ; ஆளாய் - அடிமையாய்,"[84]

'புவிக்கும் புவியதுவே கண்டீர், - கவிக்கு' (நான்.திருவந்.69:2)

என்பதில் "புவி - பூமியிலுள்ளார் ; புவியும் அதுவே (நிழல் பெற ஒதுங்குவதற்கு) இடமாவதும் அத்திருநாமமே,"[85]

'தொழிலெனக்குத் தொல்லைமால் தன்னாம மேத்த,'

(நான்.திருவந்.85:1)

என்பதில் "தொல்லைமால் - புராணனான எம்பெருமான்,"[86] திருமழிசையாழ்வார், பக்தியை நாடி நின்றவர் என்பதனைக் கூறும்,

'பெறற்கு அரிய நின்ன பாத, பத்தி ஆன பாசனம்'

(திருச்.விருத்.100:3)

என்பதில் "நின்ன - உன்னுடைய; பாதம் - திருவடி; பாசனம்- மரக்கலம்,"[87]

'கிடந்திருந்து நின்றியங்கு போதும்நின்ன பொற்கழல்

தொடர்ந்துவீள் விலாததோர்தொ டர்ச்சிநல்க வேண்டுமே'

(திருச்.விருத்.104:3-4)

என்பதில் "பொற்கழல் - அழகிய திருவடி ; வீள்வு - நீக்கம்,"[88]

'அடைக்கலம் புகுந்தஎன்னை அஞ்சல் என்ன வேண்டுமே'

(திருச்.விருத்.92:4)

என்பதில் "அடைக்கலம் - சரணாகதி; அஞ்சல் - பயப்படாதே,"[89]

'................. புனித! நின்

இலங்கு பாதம் அன்றி, மற்று ஓர் பற்று இலேன் எம் ஈசனே!'

(திருச்.விருத்.90:3-4)

என்பதில் "புனித - பரிசுத்தனே ; இலங்குபாதம் - ஒளிமிக்க திருவடிகள்; பற்று-பிடி"[90] ஆகியனவற்றைச் சொற்பொருள்களாகக் கூறியுள்ளார்.

தொண்டரடிப்பொடியாழ்வாரின் பாடல்களான,

'பொய்யெலாம் பொதிந்து கொண்ட

போட்கனேன் வந்து நின்றேன்' (திருமா.33:3-4)

என்பதில் "பொதிந்து - நிறைத்து ; போழ்க்கன் - குறும்பன்,"[91]

'சூதனாய்க் கள்வனாகித் தூர்த்தரோடு இசைந்த காலம்...'

(திருமா.16)

என்னும் பாடலில் "கள்வன் - திருடன் ; தூர்த்தன் - காமலோலன்; போதர் - அடா! இங்கே வா; புந்தி - மனம் ; ஆதரம் - அன்பு,"[92]

'புலைஅறம் ஆகிநின்ற, புத்தொடு சமணம் எல்லாம்...'

(திருமா.7)

என்பதில் "புலை அறம் - நீச தர்மம் ; அறக்கற்ற - நன்றாக ஓதின ; செற்ற - நாசம் செய்த,"[93]

'வெறுப்பொடு சமணர் முண்டர், விதி இல் சாக்கியர்கள் நின்பால்'

(திருமா.8:1)

என்பதில் "முண்டர் - சைவர் ; சாக்கியர் - பௌத்தர்,"[94]

'மற்றும்ஓர் தெய்வம் உண்டோ, மதிஇலா மானிடங்காள்!...'

(திருமா.9)

எனத் தொடங்கும் பாடலில் "மதி - தத்துவ ஞானம்; உண்டோ - இல்லை; அவன் - எம்பெருமான் ; கழல் இணை - இரண்டு திருவடிகள்,"[95]

'பழுது இலா ஒழுகல் ஆற்றுப், பல சதுப்பேதிமார்கள்!...'

(திருமா.42)

என்பதில் "பழுது - குற்றம்; ஒழுகல் ஆறு - பரம்பரையில்; சதுப்பேதிமார்கள் - சதுர்வேதிகள்; இழிகுலம் - தாழ்ந்த குலம்; ஒக்க - சமமாக ; வழிபட - ஆராதிக்கும்படி,"[96]

'வானுளார் அறியல் ஆகா, வானவா என்பர் ஆகில்...'

(திருமா.41)

எனத் தொடங்கும் பாடலில் "வான் - மேலுலகம்; வானவா - தேவனே; தேன் உலாம் - தேன் பெருகா நின்ற ; ஊனம் ஆயினகள் - இழிந்த செயல்கள் ; போனகம் - அமுது ; சேடம் - மிகுந்தது,"[97]

'அமர ஓர் அங்கம் ஆறும், வேதம் ஓர் நான்கும் ஓதி...'

(திருமா.43)

என்பதில் "அமர - நெஞ்சில் பதியும்படி ; ஓதி - படிந்து ; தமர் -

*பாகவதர் ; நுமர் - அடியார்கள் ; பழித்தல் - கீழாகப் பேசுதல் ; புலையர் - சண்டாளர்,"*[98]

'வண்டினம் முரலும் சோலை, மயிலினம் ஆலும் சோலை...'

*(திருமா.14)*

*என்னும் பாடலில் "முரலும் - ரீங்காரம் செய்யும் ; ஆலும் - கூத்தாடும்; அணவும் - படியும்,"*[99]

*'பாயும் நீர் அரங்கந் தன்னுள், பாம்பு அணைப் பள்ளி கொண்ட...'*

*(திருமா.20)*

*என்னும் பாடலில் "மாயனார் - ஆச்சரிய சக்தியையுடைய எம்பெருமான்; திருநன் மார்பு - பிராட்டி வாழ்கின்ற அழகிய மார்பு; மரகதம் உருவு - பச்சை நிறமேனி ; துவர் - சிவந்த ; முடி - திருமுடி ; தேசு - தேஜஸ் ; அடியரோர் ஸ்வரூப ஞானமுடைய தாசர்கள்; அகலில்- இழத்தல்,"*[100]

'மேம்பொருள் போக விட்டு, மெய்ம்மையை மிக உணர்ந்து...'

*(திருமா.38)*

*என்னும் பாடலில் "மேம்பொருள் - மக்கள் விரும்பும் பொருள்கள்; மெய்ம்மை- ஆன்ம சொரூபம்; காம்பு அற- அடியோடு; தலைசிரைத்து- தலையிலுள்ள சுமையைத் தொலைத்து ; தலைக்கடை- வாசல்,"*[101]

'மொய்த்த வல்வினையுள் நின்று, மூன்று எழுத்து உடைய

பேரால்...' *(திருமா.4)*

*என்பதில் "மொய்த்த - அடர்ந்து கிடக்கிற ; வல்வினை - கொடிய பாவம் ; மூன்றெழுத்து உடையபேர் - கோவிந்த ; கத்திர பந்து -*

க்ஷத்திர பந்து ; பராங்கதி - சிறந்த பதவி ; இரங்கும் - அருள் புரியும்; பித்தன்- அண்டினவரிடத்தில் மயங்கியவன் ; பிறவி - சம்சாரம் ; பிணங்கும்- வருந்தும்,"[102]

'நமனும் முற்கலனும் பேச, நரகில் நின்றார்கள் கேட்க...'

(திருமா.12)

என்னும் பாடலில் "நம்பி - பரிபூரணன் ; அளிய - அருமந்த ; அயர்த்து- மறந்து; வீழ்ந்து - விஷயாந்தரப் படுகுழியிலே வீழ்ந்து ; கவலை- துக்கம்; கவல்தல் - கவலைப்படுதல்"[103] ஆகியனவற்றைச் சொற்பொருள்களாக இயம்பியுள்ளார்.

குலசேகரப்பெருமாள், திருவேங்கடமலையிலேயே பிறவிப் பயனை அனுபவிக்க வேண்டுமென்றுரைக்கும்,

'தம்பகமாய் நிற்கும், தவம் உடையேன் ஆவேனே'

(பெரு.திரு.5:4)

என்பதில் இடம்பெறும் தம்பகம் என்பதற்கு "தம்பகம்- புதர்,"[104]

'தருதுயரம் தடாயேல் உன்சரணல்லால் சரணில்லை
விரைகுழுவும் மலர்ப்பொழில் சூழ்வித்துவக் கோட்டம் மானே!'

(பெரு.திரு.1:1-2)

என்பதில் "தடாயேல் - களையாவிடில் ; விரை - மணம்,"[105]

'அரிசினத்தால் ஈன்ற தாய், அகற்றிடினும் மற்று அவள்தன்'

(பெரு.திரு.1:3)

என்பதில் "அரிசினம் - மிக்க சினம்,"[106]

'கண்டார் இகழ்வனவே காதலன்தான் செய்திடினும்...'

(பெரு.திரு.2)

என்னும் பாடலில் "காதலன் - கணவன் ; குரைகழல் - ஒலிக்கின்ற வீரக் கழலையுடைய திருவடிகள்,"[107]

'தான் நோக்கா தெத்துயரஞ் செய்திடினும் தார்வேந்தன்

கோல்நோக்கி வாழுங் குடிபோன் றிருந்தேனே' (பெரு.திரு.3:3-4)

என்பதில் "தார் - மாலை ; கோல் - செங்கோல்,"[108]

'வாளால அறுத்துச் சுடினும் மருத்துவன்பால்...'

(பெரு.திரு.4)

எனத் தொடங்கும் பாடலில் "மாளா - நீங்காத ; காதல் - அன்பு ; ஆள் ஆ(க) - அடிமை உண்டாக ; பார்ப்பன் - நோக்கியிரா நின்றேன்,"[109]

'எங்கும் போய்க் கரை காணாது எறிகடல்வாய் மீண்டேயும்

வங்கத்தின் கூம்பேறும் மாப்பறவை போன்றேனே'

(பெரு.திரு.5:3-4)

என்பதில் "எறி-(அலை) எறியும்; வங்கம்-மரக்கலம்;கூம்பு- பாய்மரம்,"[110]

'செந்தழலே வந்து, அழலைச் செய்திடினும் செங்கமலம்...'

(பெரு.திரு.6)

என்னும் பாடலில் "அழல் - நெருப்பு ; கமலம் - தாமரை ; அந்தரம்- வானம் ; துயர் - பாவம் ; வீட்டாவிடினும் - தீர்த்தருளா தொழியினும்; அந்தம் இல்சேர் - எல்லையில்லாத உத்தம குணங்கள்; அகம் - நெஞ்சம்; குழைதல் - உருகுதல்,"[111]

'எத்தனையும் வான் வறந்த காலத்தும், பைங்கூழ்கள்...'

(பெரு.திரு.7)

எனத் தொடங்கும் பாடலில் "பைங்கூழ்கள் - பயிர்கள் ; மைத்து -

*கருநிறங்கொண்டு ; மெய்த்துயர் - தவறாது அநுபவிக்கும் துன்பம் ; சித்தம் - மனம்,"*[112]

*'தொக்கு இலங்கி யாறெல்லாம், பரந்து ஓடித் தொடுகடலே...'*

*(பெரு.திரு.8)*

*என்பதில் "தொக்கு - திரண்டு ; தொடுகடல் - ஆழ்கடல் ; சீர் - கல்யாண குணங்கள்,"*[113]

*'நின்னையே தான் வேண்டி, நீள் செல்வம் வேண்டாதான்...'*

*(பெரு.திரு.9)*

*என்பதில் "நீள் செல்வம் - அதிக செல்வம் ; திகிரி - சக்கராயுதம்"*[114] *என்பனவற்றைச் சொற்பொருள்களாக மொழிந்துள்ளார்.*

**சொற்பொருள் விளக்கம் கூறல்**

*ந.சுப்புரெட்டியார், சொற்களுக்குப் பொருள் கூறுவதோடு நில்லாது விளக்கமும் கூறியுள்ளார். இவர் "சில சொற்களுக்கு வரையறுத்துக் கூறுகின்ற பொருள் விளக்கம் நனி சிறப்பாக அமைந்து"*[115] *திறனை எடுத்துக்காட்டும் வகையில் அமைந்துள்ளது.*

*ஆண்டாள் அருளிய திருப்பாவை முப்பது, நாச்சியார் திருமொழி 143. இவ்விரு பிரபந்தங்களிலும் 'திரு' என்ற அடைமொழி இடம்பெற்றுள்ளது. இத்'திரு' என்பதை விளக்குமிடத்து "'திரு' என்ற அடைமொழிக்குச் சிறப்புப் பொருள் உண்டு. ஒன்று எம்பெருமான் அர்ச்சாவதாரமாய் எழுந்தருளியிருக்கும் திருக்கோயில்கட்கும் அவன் பெருமையைப் போற்றியுரைக்கும் நூல்கட்கும் 'திரு' என்ற அடைமொழியை அமைத்தல் வழக்கு. (எ.டு) திருக்குடந்தை, திருச்சந்த விருத்தம், சைவத்தில் திருக்கழிப்பாலை, திருச்சிற்றம்பலக் கோவையார்*

என்பன போன்றவை. இரண்டு ; 'திரு' என்பதற்கு இலக்குமி, அழகு, செல்வம், தெய்வத்தன்மை என்ற பொருள் உண்டு. ஆகவே புருஷகார பூதையான திருமகள் வழிபாடு, பாகவத சேஷத்துவமான ஆன்ம அழகு, இறைவனுக்குத் தொண்டு பூண்டொழுகுதலாகிய கைங்கரியச் செல்வம், சீரிய பயனைத் தருதற்கேற்ற தெய்வத் தன்மை பலவும் இவ்விரு நூல்களுள்ளும் இடங்கொண்டிருத்தலின், 'திரு' என்ற அடைமொழி இந்நூற் பெயர்கட்கு வழங்கப்பெற்றுள்ளது"[116] என்பர். இதில் திரு என்ற அடைமொழிக்குத் திருப்பாவை, நாச்சியார் திருமொழி ஆகிய இரு பிரபந்தங்களிலும் தெய்வத்தன்மை பொருந்திய செய்திகள் இடம்பெற்றுள்ளமையால் 'திரு' என்ற அடைமொழி வழங்கப் பெற்றுள்ளதை எடுத்துக்காட்டுடன் மொழியப் பெற்றுள்ளமை அறியப்படுகின்றது.

திருப்பாவையின் உட்பொருள் நூலிற்குப் பெயராக அமைந்துள்ளது.

*'நாமும் பாவைக்குச் சாற்றிநீ ராடினால்' (திருப்பா.3:2)*

*'பிள்ளைக ளெல்லாரும் பாவைக் களம்புக்கார்'*

*(திருப்பா.13:3)*

என்பன இதனை வலியுறுத்தும். இவ்வடிகளில் வரும், "'பாவை' என்பது பெண் ; கன்னிப் பெண். பாவை என்பதற்குப் 'பதுமை' என்ற பொருளும் உண்டு. அவர்களால் நோற்கப் பெறும் நோன்பு 'பாவை நோன்பு'; மார்கழி நோன்பு"[117] என்று பாவை என்னும் சொல்லிற்குரியப் பொருளையும் கருத்து விளக்கத்தையும் கூறியுள்ளார்.

திருப்பாவையில் உள்ளுறைப் பொருளாக நிறைந்திருக்கும் சுவாபதேசப் பொருளை விளக்குமிடத்து "சுவாபதேசப் பொருள் ;

*அஃதாவது உள்ளுறைப் பொருள். செல்வம், செயல், குணம் இவற்றில் பத்து வகைப்பட்ட ஆயர் சிறுமிகளை அஞ்ஞானத் துயிலிலிருந்து ஞான விழிப்பிற்குக் கொணர்வது வெளிப்படைப் பொருள்"[118] என்று மொழிவர்.*

*ஆண்டாள், பெருமாள் திருமாலிருஞ்சோலையில் எழுந்தருளி அமுது செய்துவிட்டுப் போய்விடாமல் என் இதயத்தில் நிலையாக இருந்துவிடும் நிலையில் ஒன்று நூறாயிரமாகக் கொடுப்பேன் என்றுரைக்கிறாள். "ஒன்று நூறாயிரமாகக் கொடுத்தலாவது - தான் சமர்ப்பித்த தடாக்களில் ஒரு தடாவை அமுது செய்தால் அதற்குக் கைம் மாறாகப் பின்னும் நூறாயிரம் (இலட்சம்) தடா சமர்ப்பித்தல்"[119] என்பர்.*

*'சதுரமா மதில்சூ ழிலங்கைக் கிறைவன் தலைபத்து...'*

*(அமல.பதி.4)*

*என்னும் அமலனாதிபிரான் நான்காம் பாசுரத்தில் திருமால் இராமனாக அவதரித்து இராவண வதம் செய்தபோது ஏற்பட்ட வீரப்பொலிவைக் குறிப்பிடுகின்றார். இப்பாசுரத்தின் முதல் இரண்டடிகளில் ஸ்ரீ வைகுண்டநாதன் பெரியபெருமாள் ஆனதைக் குறிப்பிடும்போது "பெரியபெருமாள் என்பது அரங்கநாதன் இவரைத் திருவரங்கத்தில் ஸ்தாபித்தது பெருமாள் (இராமன்). அரங்கநாதனைப் 'பெரியபெருமாள்' என்பதும் இராமனைப் 'பெருமாள்' என்பதும் இலக்குவனை இளைய பெருமாள் என்பதும் வைணவ மரபு"[120] என்பர். இதில் பெரியபெருமாள் என்று சுட்டியது இராமனை என்பது அறியப்படுகிறது.*

*வைணவர்கள் சீவான்மா பரமான்மாவுடன் கலக்குமிடத்துக் கிடக்கும் கடற்பஞ்சு போன்ற நிலையினை அடையும் நிலையில்*

பரபக்தி, பரஞானம், பரமபக்தி ஆகிய மூன்று பிரிவுகள் இருப்பதாக எடுத்துரைப்பர். இம்மூன்று பிரிவுகளை விளக்குமிடத்து. "'பரபக்தி' என்பது எம்பெருமானை நேரில் காணவேண்டும் என்கின்ற ஆவல் ; அவனை நேரில் காணல் 'பரஞானம்'; பின்பு மேன்மேலும் இடையறாது அநுபவிக்க வேண்டும் என்னும் ஆவல் 'பரபக்தி' - இவற்றை மற்றொரு விதமாகவும் பண்டைய ஆசிரியர்கள் விளக்குவர். எம்பெருமானோடு கலந்த போது சகிக்கும்படியாகவும், பிரிந்தபோது துக்கிக்கும் படியாகவும் இருக்கும் நிலை 'பரபக்தி,' ; எம்பெருமானுடைய முழு நிறைவு நேர் காட்சி 'பரஞானம்'; அவனுடைய அநுபவம் பெறாவிடில் நீரைவிட்டுப் பிரிந்த மீன்போல மூச்சு அடங்கும்படி இருத்தல் 'பரமபக்தி' என்று விளக்கம் தருவர்."[121]

இறையருள், திருப்பாணாழ்வார் மீது வெள்ளம் போல் பாய்ந்து பழவினைகளைப் பற்றறுத்ததை விளக்குமிடத்து, "வினை அல்லது கன்மம் மூன்று வகைப்படும் ஆகாமியம் (எதிர்வினை, வருவினை, மேல்வினை) இப்பிறப்பில் செய்யப்பெறுவது. சஞ்சிதம் (பழவினை, தொல்வினை, கிடைவினை) பல பிறப்புகளில் செய்யப்பெற்றுக் குவிந்த திரள். பிராரத்தம் (ஊழ்வினை, நுகர்வினை) ஒரு பிறப்புக்கென ஒதுக்கப்பெற்று உடலின் மூலம் அநுபவிப்பது"[122] என்றுரைப்பர்.

திருமழிசையாழ்வார், பெருமானின் திருமேனியைப் பரத்துவம், வியூகம், விபவம், அந்தர்யாமித்துவம், அர்ச்சை என்று ஐந்து வகையாகக் குறிப்பிடும் நிலையில் ஒவ்வொன்றின் பொருள் விளக்கமாக, "வைகுந்தத்தில் எழுந்தருளியிருக்கும் இருப்பே பரத்துவம் என்பது. வியூகம் என்பது, வாசுதேவன், சங்கர்ஷணன், பிரத்தியும்நன், அநிருத்தன் என்ற நான்கு நிலைகள். இவை திருப்பாற் கடலில் இருக்கும்

இருப்புகள். அவதாரங்கள் விபவம் என்று வழங்கப்பெறும். எல்லோருடைய இதயகமலத்தில் எழுந்தருளியிருக்கும் இருப்பே அந்தர்யாமித்துவம் ஆகும். திவ்விய தேசங்களில் திருமேனி கொண்டு எழுந்தருளியிருக்கும் நிலையும், அடியார்களின் வேண்டுகோளின்படி அவரவர் விருப்பத்திற்கேற்றவாறு திருமேனி கொண்டுநிற்கும் நிலையும் அர்ச்சாவதாரம் என்று வழங்கப்பெறும்"[123] என்று கூறுவர்.

பூதத்தாழ்வாரின்,

'நகரிழைத்து நித்திலத்த நாண்மலர் கொண்டு, ஆங்கே'

(இரண்.திருவந்.4:1)

எனத் தொடங்கும் பாடலில் இடம்பெறும் நகரிழைத்து என்பதற்கு "'நகரிழைத்து' - அரசர்கள் வசிக்கும் இடம் நகரம் எனப்படும். தேவாதி தேவனான எம்பெருமான் வசிக்கும் இடம் பக்தர்களின் இருதயம். இவ்வாழ்வார் பக்தசிரோமணி. ஆதலால் இறைவன் இவர் திருவுள்ளத்தில் உவந்து வசிப்பவன் என்பது திண்ணம். ஆகவே 'நகரிழைத்து' என்றது 'என்னுடைய நெஞ்சை அவனுக்கு உறைவிட மாக்கி' என்று பொருள்படுகின்றது"[124] என்பர்.

'அலைபண்பா லானமையால் அன்று' (இரண்.திருவந்.8:4)

என்னும் அடியில் இடம்பெறும் அலைபண்பால் என்பதற்கு "'அலைபண்பால்' - பண்பாவது, குணம் ; அலையெறிகின்ற குணம் என்றது, அளவு கடந்த குணம்"[125] என்றுரைப்பர்.

'பகற்கண்டேன் நாரணனைக் கண்டேன், கனவில்'

(இரண்.திருவந்.81:1)

என்பதில் இடம்பெறும் நாரணனைக் கண்டேன் என்பதன் விளக்கமாக "'நாரணனைக் கண்டேன்' - மறையாத சூரியனைக் கண்டேன் - என்பது

பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியானம். மற்ற அடிகளால் தான் அழகாகக் கண்டதைக் கூறுகின்றார். 'பரமபதத்தில் நித்திய சூரிகள் கண்டு கொண்டிருக்கும் திவ்விய மங்கள விக்கிரகத்தை உண்மையாகவே காணப்பெற்றேன்' என்கின்றார்"[126] என்று மொழிவர்.

திருமழிசையாழ்வாரின்,

'மறம் துறந்து வஞ்சம் மாற்றி, ஐம்புலன்கள் ஆசையும்'

(திருச்.விருத்.98:1)

என்பதில் இடம்பெறும் மறம் என்பதற்கு "பிறருக்கு ஓர் ஏற்றம் இருந்தால் அதனைப் பொறுக்கமாட்டாமையும் பிறருக்கு தீங்கு விளைவிப்பதையே சிந்திக்கையும் ஆகும்"[127] என்றும், வஞ்சம் என்பதற்கு "வஞ்சமாவது, அநுகூலன் போலத் தோன்றி முடிவில் பிரதிகூலனாய் நிற்றல் ;"[128] என்றும் விளக்கம் கூறுவர்.

இறைவனை அடையும் வழியாகிய இதம் என்பதற்கு "வீடு பேற்றிற்குச் சாதனமாக அனுட்டிக்கப்பெறும் வழி என்பது இதன் பொருள்"[129] என்பர்.

ஆண்டாள், மதுரையில் குடிகொண்டிருக்கும் பெருமாளின் திருத்தலத்திற்குச் செல்ல இயலாத சக்தியற்றவளாக இருக்கின்றாள். அப்போது தன்னிடத்துப் பரிவுள்ளவர்களை நோக்கிக் கண்ணபிரான் எழுந்தருளியிருக்கும் இடத்திற்குக் கொண்டு விடுமாறு வேண்டுகிறாள். அவர்களும் தளர்ந்த நிலையில் இருப்பதைக் கண்டு என்னை அவனிடத்துக் கொண்டு செல்ல இயலாவிடினும் அவனிடமிருந்து ஏதாவது ஒரு பிரசாதத்தையாவது கொண்டுவந்து வாழ்விக்கப் பாருங்கள் என்று கூறுமிடத்து "பிரசாதம் என்பது அருளுக்கிடமான திருத்துழாய் முதலியவை"[130] என்று பொருள் விளக்கம் கூறுவர்.

திருமழிசையாழ்வார், தான் பிறப்பதற்கு முன் எம்பெருமான் ஊரகம் என்னும் திருப்பதியில் நிற்றல், பாடகம் என்ற திருத்தலத்தில் அமர்ந்திருத்தல், வெஃகா என்ற இடத்தில் சயனத் திருக்கோலத்தில் காணப்படுதலை விளக்குமித்து, "ஊரகம் - காஞ்சி உலகளந்த பெருமாள் சந்நிதி"[131] "பாடகம் - காஞ்சியில் பாண்டவ தூதன் சந்நிதி"[132] "வெஃகா- காஞ்சியில் சொன்னவண்ணம் செய்த பெருமாள் சந்நிதி"[133] என்று கூறுவர்.

தொண்டரடிப்பொடியாழ்வாரின்,

'கலையறக் கற்ற மாந்தர்' (திருமா.7:3)

என்னும் பாசுரத்தில் இடம்பெறும் 'கலையறக்கற்ற மாந்தர்' என்பதற்கு, "கூரத்தாழ்வான் போன்றாரை எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம். சுருதி சுமிருதி இதிகாசங்களில் நிலை நின்றவர்களாய் வேதாந்தபர்யம் கைப்பட்டவர்கள்"[134] என்றுரைப்பர்.

'குடதிசை முடியை வைத்துக், குணதிசை பாதம் நீட்டி...'

(திருமா.19)

என்னும் பாடலில் நான்கு திசைகளிலும் பெருமானின் படுக்கையால் பயன்பெறுதலை எடுத்துக்காட்டுமிடத்து, "மேற்குத்திக்கு - தாம் விண்ணுலகத்திற்கும் மண்ணுலகத்திற்கும் தலைமை வகித்தலைத் தெரிவிக்குமாறு தான் சூடிய கிரீடத்தை (திருவபிஷேகத்தை)யுடைய திருமுடியை வைப்பதனால் சிறப்படைகின்றது. கீழைத்திக்கு - எல்லா உலகங்களும் உய்யும்படி சரணமடைவதற்குரிய தனது திருவடிகளை நீட்டுவதனால் பெருமை அடைகின்றது. வடக்குத்திக்கு - முரட்டு சமஸ்கிருதம் நடையாடுவதாகி ஆழ்வார்களின் செவிக்கினிய ஈரச்சொல் நடையாடாத தேசமாகையாலே அத்திக்கிலுள்ளாரும் ஈடேறுவதற்கு

ஏற்பட வேண்டிய பின்னழகையெல்லாம் காட்டுவதனால் மேன்மை பெறுகின்றது. தெற்குத்திக்கு - தனது அந்தரங்க பக்தனான விபீடணாழ்வானுக்காகத் தனது திருக்கண்களை வைத்து அன்போடு நோக்குவதனால் சிறப்படைகின்றது"[135] என்று கூறுவர். நான்கு திசைகளில் உள்ளவர்களும் பயன்பெற வேண்டும் என்று காரணம் காட்டி பெருமான் பள்ளிகொண்டது புலப்படுகிறது.

'அற்றமே லொன்ற றியீர்' (திருமா.9:5)

என்பதில் இடம்பெறும் அற்றம் என்பதற்கு, "அற்றம் - மறைபொருள்; உட்கருத்து"[136] என்பர்.

குலசேகரப்பெருமாள், பெருமானின் திருமேனியைப் பரம், வியூகம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை என்று ஐந்தாக வகைப் படுத்துவதோடு, "பரம் என்பது, வைகுந்தத்தில் எழுந்தருளியிருக்கும் பரவாசு தேவனின் உருவம். வியூகம் என்பது, திருப்பாற்கடலில் வாசுதேவன். சங்கர்ஷணன், பிரத்தியும்னன், அநிருத்தன் என்ற உருவங்கள். விபவம் என்பது, எண்ணற்ற அவதார மூர்த்திகள். அந்தர்யாமி என்பது எல்லோருடைய இதய கமலத்தில் எழுந்தருளியிருக்கும் நிலை. அர்ச்சை என்பது திவ்வியதேசங்களில் எழுந்தருளியுள்ள நிலையும், மற்றும் பக்தர்களின் வேண்டுகோளின்படி அவரவர் விருப்பத்திற்கேற்றவாறு திருமேனி கொண்டு நிற்கும் நிலையும்"[137] என்று ஒவ்வொன்றிற்கும் விளக்கம் கூறுவர்.

குலசேகரப்பெருமாள், கண்ணபிரானிடத்து ஊடல் கோபங் கொண்ட கோபியர் அவனை வெறுத்துரைத்த அனுபவத்தை ஆய்ச்சியர் கூறுவது போல எடுத்துரைக்கும்,

'வல்வினை யேன்துயில் கொண்டவாறே' (பெரு.திரு.6:2)

என்பதில் இடம்பெறும் வல்வினையேன் என்பதற்கு "நீ என்னை ஒருத்தியையே விரும்பி மற்றையோரைக் கண்ணெடுத்துப் பாராமலிருப்பதற்கு உறுப்பான பாக்கியமற்ற நான்' என்பது கருத்து"[138] என்று மொழிவர்.

குலசேகரப்பெருமாள், அழகியமனவாளனுடைய கண் நோக்கில் நிலவுகின்ற இரண்டு திருமணத் தூண்களை ஆதாரமாகப் பற்றிக் கொண்டு வணங்க வேண்டும் என்பதை எடுத்துரைக்குமிடத்து, "திருமணத்தூண் என்பது சம்பிரதாயத் திருநாமம். இவை அழகிய மணவாளனின் கருவறையருகில் இருக்கும் இரண்டு தூண்கள். அழகியமணவாளனது திருமேனியின் பரிமளம் இரண்டு தூண்களாகப் பரிணமித்து நிற்பதால் இப்பெயர் பெற்றது"[139] என்பர்.

குலசேகரப்பெருமாள், பாகவதர்களுடைய பெருமையை எடுத்துரைக்கும் ஸ்ரீவசன பூஷணத்தில் இடம்பெறும் வேதகப்பொன் என்பதற்கு, "பலவிதமான சித்த மருந்துகளை இட்டுப் பலகால் உருக்கிக் குளிகையாகப் பண்ணி, இரசவாதிகள் தங்கள் கைகளில் வைத்திருக்கும் பரிசவேதியான பொன்"[140] என்றும் இரசவாதிகள் தங்கள் கையில் வைத்திருக்கும் பரிசவேதி என்பதற்கு "பரிசவேதி - தன்னுடைய சம்பந்தத்தால் பேதிப்பது வேறுபடுத்துவது. பரிசம் - சம்பந்தம் ; வேதி- பேதிப்பது. இரும்பின் கரிய நிறத்தைப் பொன்னிறமாக்குவது"[141] என்றும் பொருள் விளக்கம் கூறுவர்.

'மாலையுற்ற கடல்கிடந்தவன்...' (பெரு.திரு.8)

என்னும் பாடலில் இடம்பெறும் மாலை என்னும் சொல் திரும்பத் திரும்ப இடம்பெற்றுள்ளது. ஒவ்வொரு இடங்களிலும் வெவ்வேறு

பொருள் உரைப்பதை "'மாலை உற்ற கடல்' என்பதில் 'மாலை' என்பது தொட்டுணர்தல் என்று பொருள்படும். 'நறுந்துழாய் மாலை உற்ற' என்பதில் 'மாலை' என்பது 'பூமாலை' என்று பொருள்படுகின்றது. 'மாலை உற்று எழுந்து' என்பதில் 'மாலை' என்பது மயக்கம் (வியாமோகம்) என்று பொருள்படுகின்றது"[142] என்பர்.

**தொகுப்புரை**

பெரியாழ்வார், ஸ்ரீவில்லிபுத்தூரில் திருத்துழாய் பாத்தியமைத்தற்காக நந்தவனத்தைக் களைக்கொட்டு கொண்டு தோண்டுமிடத்து பெண்மகவு கிடைத்த நிகழ்வை, கம்பர் பாடலோடு எடுத்துரைக்குமிடத்து கதிர் - சூரியன், புவிமடந்தை - பூமிதேவி, புணரி-கடல் என்றும்,

கோதை, தன் தந்தையாகிய பெரியாழ்வார் போன்று இயற்கை அழகுகளில் எல்லாம் கண்ணனையே கண்டதைக் கூறுமிடத்து கொண்டல் - மேகம், வரை - மலை, கண் - கறுத்த, பூவை - பூவைப்பூ என்றும்,

கோதை, வேணுகோபாலன் தான் படரவேண்டிய கொள்கொம்பு என்று உணர்ந்த நிலையில் ஆபரணங்களை அணிந்து, நீலநிறப் புடவையை உடுத்தி, கோவைப் பழம் போன்ற தன் சிவந்த வாயை திருத்திக்கொண்டு மணிவண்ணனின் பெயரைப் பிதற்றிக் கொண்டிருந்ததைக் கண்ட பெரியாழ்வார் திடுக்கிட்டுத் தன் அனுபவத்தை நற்றாய் நிலையில் கூறுமிடத்து, காறை - கழுத்தணி ; கூறை - ஆடை ; அயர்க்கும் - மறக்கும் ; தேறி - தெளிந்து என்றும் சொற்பொருள்களைக் காட்டியுள்ளார்.

ஆண்டாள், கண்ணன் தன்னிடத்துக் கலவி செய்யாத நிலையில் அவனின் பிரிவைத் தாங்காது பிரிந்திருப்பவர்களைக் கூட்டவல்ல காமனை நோக்கி இரந்து வேண்டுதலில் வானவர் - தேவர்கள், வகுத்த-கொடுத்த, உத்தமன் - புருடோத்தமன், உன்னித்து- ஆதரவுடன் என்றும்,

கண்ணன் இரவில் பெண்களுடன் புணர்ந்து பிற்பகுதியில் உறங்கக் கூடியவன். பொழுது விடியும் வரை கண் விழிக்கமாட்டான் என்று நினைத்த ஆய்ச்சியர் பொய்கைக்கு நீராட வருகின்றனர். இதையறிந்த கண்ணன் அப்பெண்கள் வருமுன்னர் பொய்கை அடைகிறான். அவர்கள் ஆடைகளைக் களைந்து கரையில் வைத்தபோது அதனை வாரிச் சுருட்டிக்கொண்டு குருந்த மரத்தின் மீது ஏறி மறைகிறான். இதனைக் கூறுமிடத்து ‘குடைந்து - மூழ்கி ; ஆழியன்- சூரியன்; அரவணை - பாம்புப் படுக்கை என்றும்,

ஆண்டாள், கண்ணனை அடையவேண்டிக் குயிலை வேண்டுவதாக அமையும் பாடலில் ஞாழல் - தாழை, பொதும்பு - பொந்து என்றும் சொற்பொருள்களை அமைத்துள்ளார்.

ஆண்டாள் பெருமாளிடத்துத் தூது விடுத்தல், காதல் முற்றிய நிலை, பெருமாளின் மார்பு, திருப்பாணாழ்வாரை ஆட்கொள்ளல் ஆகிய கருத்தமைந்த பாடல்களில் சொற்பொருள்களை அமைத்துள்ளார்.

திருப்பாணாழ்வார், பெருமாளின் அனைத்து உறுப்புகளிலும் தன் உள்ளத்தைப் பறிகொடுத்து உள்ளம் மகிழ்ச்சியடைந்ததைக் கூறுமிடத்து பாலகன் - குழந்தை ; ஞாலம் - உலகம் ; கோலம் -

*அழகிய; ஆரம் - மாலை ; தாமம் - மாலை ; எழில் - அழகு ஆகியனவற்றை எடுத்துரைத்துள்ளார்.*

*பொய்கையாழ்வாரின் முதல் திருவந்தாதி 86, 38, 40, 44;1-2, 67;4, 68, 81, 17;1-2, 92, 67, 99, 33;3-4, 95, 87;2, 72 ஆகிய பாசுரங்களில் இடம்பெறும் சொற்களுக்குப் பொருள் கூறியுள்ளார்.*

*பூதத்தாழ்வாரின், இரண்டாம் திருவந்தாதி 1;1-2, 89;1-2, 75, 72, 57, 4, 39, 42, 81, 27;3, 21, 59 ஆகிய பாசுரங்களில் உள்ள சொற்களுக்குப் பொருள் அமைத்துள்ளார்.*

*பேயாழ்வார் மூன்றாம் திருவந்தாதி 1, 62, 54;3, 42;2, 60;3, 70, 71, 45, 58, 39;1-2, 12;1-2, 79;1-2, 78, 22;3-4, 76;1-2, 76;3-4, 59;3-4, 86, 87, 10;1 ஆகிய பாசுரங்களுக்குச் சொற்பொருள்களை கூறியுள்ளார்.*

*குலசேகரப் பெருமாளின் பெருமாள் திருமொழியிலுள்ள 8, 5;4, 1;1-2, 1;3, 2, 3;3-4, 4,5;3-4, 6, 7, 8, 9 ஆகிய பாசுரங்களுக்குச் சொற்பொருகளை எடுத்துரைத்துள்ளார்.*

*திருமழிசையாழ்வாரின் திருச்சந்த விருத்தப் பாசுரங்களான 90;1, 98;1-2, 120, 100;3, 104;3-4, 92;4, 90;3-4 நான்காம் திருவந்தாதிப் பாசுரங்களான 40;1, 54;3-4, 13;3, 9;2-3, 69;2, 85;1 ஆகியவற்றிற்கும்*

*தொண்டரடிப்பொடியாழ்வாரின் திருமலை 33;3-4, 16, 7, 8;1, 9, 42, 41, 43, 14, 20, 38, 4, 12 ஆகியவற்றிற்கும் பொருள்களைக் கூறியுள்ளார்.*

*திருப்பாவை, நாச்சியார் திருமொழி ஆகிய இரு பிரபந்தங்களிலும் இடம்பெற்றுள்ள 'திரு,' ; திருப்பாவையிலுள்ள 'பாவை,' ;*

திருப்பாவையின் உள்ளுறைப் பொருளான 'சுவாபதேசப் பொருள், ஆண்டாள், பெருமாளுக்கு 'ஒன்று நூறாயிரமாகக் கொடுத்தல்,' ; சீவான்மா, பரமான்மாவுடன் கலக்குமிடத்து கடற்பஞ்சு போன்ற நிலையையடையும்போது பரபக்தி, பரஞானம், பரமபக்தி ஆகிய பிரிவுகள், வினை அல்லது கன்மத்தின் மூன்று வகைகளான ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தம் ; பெருமானின் திருமேனியான பரத்துவம், வியூகம், விபவம், அந்தர் யாமித்துவம், அர்ச்சை ; பூதத்தாழ்வாரின் இரண்டாம் திருவந்தாதி 4;1 பாசுரத்தில் இடம்பெறும் 'நகரிழைத்து,'; 8;4 பாசுரத்தில் இடம்பெறும் 'அலைபண்பால்' ; 81;1 பாசுரத்திலுள்ள 'நாரணனைக் கண்டேன்' ; திருமழிசையாழ்வாரின் திருச்சந்த விருத்தம் 98 ; 1 பாசுரத்தில் இடம்பெறும் 'மறம்,' 'வஞ்சம்'; இறைவனை அடையும் வழியாகிய 'இதம்' ; 'பிரசாதம்' ; பெருமாளின் திருத்தலங்களாகிய 'ஊரகம்,' 'பாடகம்,' 'வெஃகா'; தொண்டரப்பொடியாழ்வாரின் திருமாலை 7;3 பாசுரத்திலுள்ள 'கலையறக்கற்ற மாந்தர்' ; பெருமான் பள்ளி கொண்டதாகிய 'மேற்குத்திக்கு' ; 'கீழைத்திக்கு' ; 'வடக்குத் திக்கு,' 'தெற்குத் திக்கு' ; பெருமாளின் திருமேனியாகிய பரம், வியூகம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை ; குலசேகரப் பெருமாளின் பெருமாள் திருமொழி 6;2 பாசுரத்தில் இடம்பெறும் 'வல்வினையேன்' அழகிய மணவாளனுடைய கண்நோக்கிலுள்ள 'திருமணத்தூண்' ; இரசவாதிகள் கையில் வைத்திருக்கும் 'பரிசவேதி' ; பெருமாள் திருமொழி 8ஆம் பாசுரத்தில் இடம்பெறும் 'மாலை' ஆகிய சொற்களுக்குப் பொருள் விளக்கம் எடுத்துரைத்துள்ளார்.

## சான்றெண் விளக்கம்

1. இரா.மோகன், ந.சொக்கலிங்கம், உரை மரபுகள், ப.154
2. மு.வை.அரவிந்தன், உரையாசிரியர்கள், ப.180
3. ந.சுப்புரெட்டியார், ஆழ்வார்களின் ஆராஅமுது, ப.2
4. மேலது, ப.7
5. மேலது, ப.9
6. மேலது, ப.29
7. மேலது, ப.32
8. மேலது, ப.33
9. மேலது, ப.37
10. மேலது, ப.40
11. மேலது, ப.40
12. மேலது, ப.42
13. மேலது, ப.47
14. மேலது, ப.66
15. மேலது, ப.69
16. மேலது, ப.71
17. மேலது, ப.80
18. மேலது, ப.80
19. மேலது, ப.81
20. மேலது, ப.82
21. மேலது, ப.88
22. மேலது, ப.93
23. மேலது, ப.96

24. மேலது, ப.97

25. மேலது, ப.97

26. மேலது, ப.101

27. மேலது, ப.101

28. மேலது, ப.102

29. மேலது, பக்.102-103

30. மேலது, ப.103

31. மேலது, ப.104

32. மேலது, ப.105

33. மேலது, ப.106

34. மேலது, ப.107

35. மேலது, ப.108

36. மேலது, ப.109

37. மேலது, ப.109

38. மேலது, ப.112

39. மேலது, ப.113

40. மேலது, ப.113

41. மேலது, ப.116

42. மேலது, ப.117

43. மேலது, ப.117

44. மேலது, ப.119

45. மேலது, ப.120

46. மேலது, ப.121

47. மேலது, ப.122

48. மேலது, ப.122

49. மேலது, ப.123

50. மேலது, ப.123

51. மேலது, ப.124

52. மேலது, ப.126

53. மேலது, ப.126

54. மேலது, ப.129

55. மேலது, ப.131

56. மேலது, ப.132

57. மேலது, ப.133

58. மேலது, ப.133

59. மேலது, ப.134

60. மேலது, ப.136

61. மேலது, ப.137

62. மேலது, ப.137

63. மேலது, ப.137

64. மேலது, ப.138

65. மேலது, ப.139

66. மேலது, ப.139

67. மேலது, ப.142

68. மேலது, ப.144

69. மேலது, ப.144

70. மேலது, ப.145

71. மேலது, ப.145

72. மேலது, ப.146

73. மேலது, ப.146

74. மேலது, ப.147

75. மேலது, ப.148

76. மேலது, ப.148

77. மேலது, ப.149

78. மேலது, ப.155

79. மேலது, ப.174

80. மேலது, ப.180

81. மேலது, ப.182

82. மேலது, ப.188

83. மேலது, ப.189

84. மேலது, ப.189

85. மேலது, ப.190

86. மேலது, ப.190

87. மேலது, ப.191

88. மேலது, ப.192

89. மேலது, ப.192

90. மேலது, ப.192

91. மேலது, ப.209

92. மேலது, ப.210

93. மேலது, ப.214

94. மேலது, ப.215

95. மேலது, ப.216

96. மேலது, ப.217

97. மேலது, ப.220

98. மேலது, ப.221

99. மேலது, ப.222

100. மேலது, ப.223

101. மேலது, ப.225

102. மேலது, ப.229

103. மேலது, ப.231

104. மேலது, ப.273

105. மேலது, ப.276

106. மேலது, ப.277

107. மேலது, ப.278

108. மேலது, ப.279

109. மேலது, ப.280

110. மேலது, ப.281

111. மேலது, ப.282

112. மேலது, ப.283

113. மேலது, ப.284

114. மேலது, ப.285

115. இரா.மோகன், ந.சொக்கலிங்கம், உரைமரபுகள், ப.136

116. ந.சுப்புரெட்டியார், ஆழ்வார்களின் ஆராஅமுது, பக்.16-17

117. மேலது, ப.17

118. மேலது, ப.20

119. மேலது, ப.45

120. மேலது, ப.65

121. மேலது, ப.110

122. மேலது, ப.66

123. மேலது, ப.186

124. மேலது, ப.127

125. மேலது, ப.130

126. மேலது, பக்.134-135

127. மேலது, ப.182

128. மேலது, பக்.182-183

129. மேலது, ப.190

130. மேலது, பக்.45-46

131. மேலது, ப.183

132. மேலது, ப.183

133. மேலது, ப.183

134. மேலது, ப.214

135. மேலது, ப.201

136. மேலது, ப.216

137. மேலது, ப.238

138. மேலது, ப.257

139. மேலது, ப.264

140. மேலது, ப.265

141. மேலது, ப.265

142 . மேலது, பக்.268-269.

# பல் நயங்கள்

இலக்கியமானது கற்பவர்களிடத்து மதிப்பும், ஈடுபாடும் ஏற்படுத்தக்கூடிய விதத்தில் திகழ்தல் வேண்டும். தகுந்த தேர்ந்த சொல்லாட்சிகளைப் பயன்படுத்தி இலக்கியத்தைச் செழுமைப்படுத்துதல் வேண்டும். இவ்வகையில் ந.சுப்புரெட்டியார் பல்வேறு நயங்களைக் கையாண்டுள்ளதை அறிவது இவ்வியலின் நோக்கமாக அமைகிறது.

**தொடர் நயம்**

நுண்ணறிவும் நூலறிவும் ஒருங்கே கைவரப்பெற்றவரால்தான் சொற்றொடர்களை நயம்பட எடுத்துரைக்க இயலும். அவ்வகையில் இப்பண்பு ந.சுப்புரெட்டியாரிடத்துக் காணப்படுகிறது.

பெரியாழ்வார், துளசிப் பாத்திகளுக்கிடையில் கண்டெடுத்த குழந்தையைக் கொண்டுவந்து தன் மனைவியாகிய விரஜையிடம் கொடுக்கிறார். அவள் அக்குழந்தையை அணைத்துக்கொண்டு போய் தொட்டிலில் இடுகின்றாள். பெரியாழ்வார் தன் மனைவி விரஜையிடம் அக்குழந்தை கிடைத்த விதத்தைச் சொல்லும்போது விரஜைக்குப் பக்தியும் வியப்பும் அதிகரித்தன. “பிள்ளைக் கலிதீர இந்தப் பெண் கனியைப் பெருமாளே நமக்கு அளித்துவிட்டார் என்று எண்ணி அக்குழந்தையை நோக்க நோக்க அவள் உள்ளத்தில் உவகை புதிது புதிதாக ஊறிக்கொண்டிருந்தது.”[1] இதில் விரஜை பிள்ளைக் கலிதீர பெருமாளே இக்குழந்தையைக் கொடுத்ததாக எண்ணி உவகை அடைதலை நயம்படக் கூறியுள்ளார்.

பெரியாழ்வார், தான் தொடுத்த மாலைகளை ஸ்ரீவில்லிபுத்தூரில் எழுந்தருளியிருக்கும் ஆழிலைப் பள்ளியானுக்கு அனுவித்து வருவதைக் கண்ட கோதைக்கும் பக்தி பெருகியது. குழந்தைப் பருவம் முதற்கொண்டு

விளையாட்டு, விருப்பம், லட்சியம் அனைத்தும் கோதைக்குப் பக்தி மையமாகக் காணப்பட்டன. "அழகின் கொழுந்தாகவும் அன்பின் கொழுந்தாகவும் வளர்ந்த கோதை பக்தியின் கொழுந்தாகவும் விளங்குவது கண்டு பெருமகிழ்ச்சி கொண்டார் பெரியாழ்வார்."[2] இதில் பெரியாழ்வார், கோதையின் பக்தி நயத்தைக் கண்டு மகிழ்ச்சியடைவதை நயத்துடன் எடுத்துக்காட்டியுள்ளார்.

ஆண்டாள், பெருமாளிடத்துக் காதல் வயப்பட்டு ஆற்றாமை மீதுர்ந்த நிலையில் மேகத்தைத் தூது விடுக்கின்றாள். அந்நிலையில் அம்மேகத்திடம் பெருமாள் தன்னுடன் கலவியில் ஈடுபடுவார் என்று நம்பிக்கை கொண்டு தன் மார்பகங்களில் குங்குமக் குழம்பு பூசி அணி செய்து வைத்திருப்பதாகவும் அதனைப் பயனுடையதாகச் செய்தால் ஆவி தங்கும் என்றும் சொல்ல வேண்டி உரைக்கின்றாள். இதில் 'ஆவி தங்கும்' என்பதை "ஒரு நாள் அணைவது போகத்துக்குப் போதாது ; அஃது உயிர் தரிப்பிற்கே சாலும் என்ற குறிப்பு அறிந்து மகிழத்தக்கது"[3] என்று நயம்பட அமைத்துள்ளார்.

திருப்பாணாழ்வார், இறைவனின் அழகை அகக்கண்ணாலும் புறக்கண்ணாலும் அனுபவித்த நிலையில் சிந்தை கவர்ந்த வாயில் வெண்ணெய் மணக்கின்றது என்ற கருத்துப் புலப்பட, "பெரிய பெருமாளின் திருமேனியில் முன்பு வீரப்பொலிவு கண்ட ஆழ்வார் இப்போது வெண்ணெயையும் வெண்ணெய் போன்ற உள்ளங்களையும் களவாடிய கண்ணபிரானின் அழகுப் பொலிவினை அநுபவிக்கின்றார்"[4] என்பர்.

பொய்கையாழ்வார், எம்பெருமானையன்றி பொருள்களைப் பற்றிய அறிவு அறிவல்ல என்னும் கருத்துப் பொருள்பட, "மனத்தினால்

தேடும்போது நின் திருவடிகளையே தேடுவேன் ; வாயினால் நின் புகழ்களையே பாடுவேன் ; உன்னுடைய அழகிய திருவடிகளையே சூடுவேன்"[5] என்று கூறுவர்.

பூதத்தாழ்வார், பரமபதத்தில் நித்திய சூரிகள் காணும் திவ்விய மங்கள விக்கிரகத்தை காணப்பெற்றதாகக் கூறும்போது, "இப்படிப்பட்ட பத்திநெறி பரமபதத்தைப் போலே இன்பமான தொன்றும், நரகத்திற்குப் போகும் வழி நரகத்தைப் போலவே துன்பமயமான தென்றும் சொல்லுகின்றனர் வைணவப் பெருமக்கள்"[6] என்பர். இதில் பக்தி நெறி குறித்து வைணவர்கள் கூறும் கருத்து நயம்பட அமைந்துள்ளது.

திருமழிசையாழ்வாரின் பாசுரங்களில் திருமாலின் பெருமையும் வைணவ தத்துவமும் பேசப்படுவதை, "ஒரு மாபெருங்கடல். அதில் தோன்றிய அலைகள் உலகங்களாம். புற உலகத்தைப் போல் உள்ளுலகமாகிய மனத்தில் நடைபெறும் நிகழ்ச்சிகளும் அந்த மாக்கடலில்தான் தோன்றுகின்றன ; அடங்குகின்றன. எல்லையில்லாத சோதி வெள்ளம் ; நினைக்கவும் முடியாத சக்தி வெள்ளம் ; உயிர்க்கெல்லாம் தாயாகிய கருணை வெள்ளம் ; அழகு வெள்ளமும் அதுதான். ஆறித் தோன்றும் அழகும் சீறித் தோன்றும் அழகும் அதில் அடங்கியுள்ளது"[7] என்றுரைப்பர்.

பெருமாள், சாத்திரங்களாகிய வலையில் சிக்கிக் கொண்டு இருப்பாரென்றும் திருமழிசையாழ்வார் பெருமானுடைய கால்வலையில் அகப்பட்டவனென்பதையும் கூறுமிடத்து "எம்பெருமான் ஒரு வலையில் அகப்பட்டான் ; நான் ஒரு வலையில் அகப்பட்டேன்"[8] என்று நயம்பட அமைத்துக் கூறுவர்.

திருமழிசையாழ்வார், பெருமானின் திருவடியை நாடி நிற்கும் பக்தியாகிய மரக்கலத்தைத் தந்தருள வேண்டுமென்று வேண்டும் நிலையில், "பிறவிப் பெருங்கடல் நீந்துவதற்கு ஏற்ற புணையாகும் என்பது அவருடைய அசைக்கமுடியாத நம்பிக்கை. அவன் தாளை வணங்குவதற்கு அவன் அருள் வேண்டும்"[9] என்று நயம்பட உரைப்பர்.

**கருத்து நயம்**

ஆழ்வார்களின் ஆராஅமுது என்ற நூல் செறிந்த கருத்துகளைக் கொண்டதாக அமைந்துள்ளது.

திருப்பாணாழ்வார், திருவரங்க சன்னிதிக்கு முன்பு நின்று பக்தியுடன் தன்னையறியாது, இசைபாடிக் கொண்டிருந்த நிலையில், லோகசாரங்க மாமுனிவர், திருப்பாணாழ்வாரைக் கண்டதும் சினம் கொண்டு தூரச் செல்லுமாறு பலமுறை கூறுகின்றார். சினம் பற்றியக் கருத்து விளக்கமாக, "உள்ளத்தில் உள்ள வெறுப்பும் பகையுமே வெகுளியாய் வெளிப்படும். அஃது அருளுடைமைக்கு மாறானது. ஆகையால் அதற்கு இடம் இல்லாமல் காத்துக் கொள்வது சிறந்தது. சில சமயம் வலியார் மேல் சினம் பிறப்பதுண்டு ; ஆனால் அது பலிக்காது ; வலியாரை அது ஒரு சிறிதும் துன்புறுத்த முடியாது. மெலியார் மேல் சினம் பிறந்தால் அஃது அவர்களைத் துன்புறுத்தவல்லது. ஆகையால் சினம் பலிக்காதவிடத்தில் மட்டிலும் சினம் கொள்ளாமல் அடக்கிக் கொள்வது போதாது. இங்குச் சினம் காப்பதும் காவாததும் ஒன்றுதான்"[10] என்ற கருத்தினை நயம்பட மொழிவர்.

பெருமானின் திருவடிகள் திருப்பாணாழ்வாரை விடாது பற்றிக் கொள்ளும் தன்மையுடையதை, "பாலுண்ணும் பச்சைக்குழவி தாயின் மற்றைய அவயங்கள் யாவையும் விட்டு, எங்ஙனம் தான் உயிர்

வாழ்தற்கிடனாய் உள்ள அவள் கொங்கையில் வாய் வைக்கின்றதோ, அங்ஙனமே, சேஷியாகிய ஈசுவரனைப் பற்றப்புகும் சேதநனும் எம்பெருமானுடைய பல உறுப்புகளையும் விட்டுத் தான் உய்வதற்கு இடனாய் உள்ள அவன் திருவடிகளையே பற்றுகின்றான். முந்திய செயல் குழந்தைக்கு இயல்பாமாறு போல, பிந்திய செயல் சேதநன் சொரூபத்திற்கு இயல்பாய் அமைந்ததாகும்"[11] என்று குறிப்பிடுவர். இதில் வைணவர்களுக்குப் பெருமாளின் திருவடிப்பேறுதான் அடையத்தக்க குறிக்கோள் பொருள் என்பது அறியத்தக்கது.

பொய்கையாழ்வார், பெருமாளின் சிறப்பினை "புருடோத்தம் ஒருவன் உளன் ; அவன் என்றும் உள்ளவன் ; அன்போடு நினைப்பவர் உள்ளத்தைப் பாற்கடலாகவும், திருமலையாகவும் கொள்ளுகின்றான்!"[12] என்பர். மேலும் ஞானம், மெய்ஞ்ஞானம் அடைவதற்குரிய வழியாக, "உள்ளம் தெளியத் தெளிய கடவுள் உண்மையும் தெளிவாகும் என்பது இந்த ஆழ்வார் காட்டும் வழி. உண்மை தெளிவுபெறப் புலன்களை வென்றாக வேண்டும் ; அப்போது தான் ஞானம் மெய்ஞ்ஞானம் ஆகும்"[13] என்றுரைப்பர்.

பூதத்தாழ்வாரின் பக்தி அனுபவம் பரஞானம் என்பதை விளக்குமிடத்து, "பரஞானம் ; அஃதாவது, எம்பெருமானை நேரில் காணல்"[14] என்பதும் பேயாழ்வாரின் பரமபக்தியினை, "எம்பெருமானுடைய அநுபவம் பெறாவிடில் நீரை விட்டுப் பிரிந்த மீன்போல் மூச்சு அடங்கும்படி இருத்தல் 'பரமபக்தி'யாகும்"[15] என்பதும் பேயாழ்வார், புலன்களை அடக்குவதற்குரிய வழியாகப் பக்தி நெறியைக் குறிப்பிடும் போது, "புலன்களை அடக்குவதற்கு ஒரே குறுக்கு வழி பக்திதான் ; இறைவனிடத்தில் மனம் சுழித்தோடினால் ஆசைகளும்

எண்ணங்களும் தாமே ஓடிப்போகும்"[16] என்பதுமான கருத்துகளை நயம்பட அமைத்துள்ளார்.

பேயாழ்வார், பெருமானை வழிபடும் போது உள்ளம் தூய்மையடையும். களங்கமற்று இருந்தால் பக்தன் உள்ளத்தில் பெருமான் பள்ளிகொள்வான் என்பதை "உண்மையாக உள்ளம் உருகி உவப்புடன் உலகளந்தானை வழிபடும் போது உள்ளம் தூய்மையாகின்றது. களங்கம் அகன்றால் பரமபதநாதன் பாம்பணையை விட்டு வந்து பக்தன் உள்ளத்தில் பள்ளிகொண்டு விடுகின்றான்"[17] என்று கருத்து நயமிக்கதாக உரைப்பர்.

திருமழிசையாழ்வார், "பசுமலை, குருவி மலை என்று பல மலைகளின் பெயர்களைச் சொல்லும் அடைவிலே 'திருவேங்கடமாமலை' என்று என் வாயில் வந்துவிட்டது. இதனால் பரமபதமும் எனக்குச் சித்தித்துவிட்டது"[18] என்று திருவேங்கடமலையிடத்து ஆழங்கால்பட்டதை எடுத்துரைப்பர்.

தொண்டரடிப்பொடியாழ்வார், "ஆற்றுப் பெருக்கிலே அருகிலுள்ள கரைகள் உடைந்தால் கரையைப் பாதுகாப்பவர்கள் கைவிட்டுக் கடக்க நின்று கூப்பிடுமாப்போல கூப்பிடுகின்றார். பெரிய பெருமாள் அழகை கண்டு குறியழியாது புறப்படுகின்ற சம்சாரிகளைப் பார்த்து 'உங்களைப் போலே உடல் உருகாதே கல்லாயிருப்பதற்கு ஒரு வழி சொல்லமாட்டீர்களோ? என்கின்றார்"[19] என்பர். இதில் பிறவிப் பயனைக் கடக்க வேண்டுமென்று எண்ணியது புலப்படும்.

தொண்டரடிப்பொடியாழ்வார், தான் மேற்கொண்ட தீய வழிகளுக்குக் கழுவாய் செய்துகொள்ள முயன்று பெரியோர்களிடத்துச்

சென்று தாம் செய்த குற்றங்களையெல்லாம் எடுத்துக் கூறி கழுவாய் இன்னதென்று கூறுமாறு வேண்டுகின்றார். அவர்களும் நீதிநூல்களை ஆராய்ந்து, "பாகவதர்களின் ஸ்ரீபாத தீர்த்தத்தை உட்கொள்வதே எல்லாப் பாவங்களும் பரிகாரம் ஆவதற்கு ஏற்ற கழுவாயாகும்"[20] என்பர். இதில் உய்வதற்கு வழிகாட்டும் நிலை கருத்து நயம்பட அமைந்துள்ளது.

திருமழிசையாழ்வார், முதல் ஆழ்வார்களைப் போன்று அன்பு நெறியை அதாவது பக்தி நெறியைப் பின்பற்றுவது சிறந்த வழி என்னும் கொள்கை புலப்பட, "ஐம்புலன்களை வெற்றி கொண்டேன்; உடம்பை அடக்கி ஆண்டேன் ; என்று சொல்லுகின்றவர்கள் உடம்பைக் கொடிய தவங்களாலும் விரதங்களாலும் வாட்டி வதைத்து உடம்பை எலும்புக் கூடாக்குவது அறியாமை என்கின்றார்"[21] என்பர். சினத்தால் தாய் தன் குழந்தையை வெறுத்தாலும் குழந்தை அழுது அழுது தாயின் கருணைக்குப் பாத்திரமாகின்றது. அதுபோல இறைவனை அடையக் கண்களில் நீர் மல்க அழவேண்டும் என்னும் கருத்துப் புலப்பட "பரமான்மாவுக்கும் சீவான்மாவுக்கும் உள்ள உறவுமுறை தாய்க்கும் சேய்க்கும் உள்ள உறவுமுறை போன்றது என்பதை அறிகின்றோம்"[22] என்றுரைப்பர்.

**எடுத்துக்காட்டு நயம்**

பிறருக்குக் கருத்துகள் எளிதாக விளங்க வேண்டுமெனின் உதாரணங்கள் பலர் அறிந்த வழக்காக இருத்தல் வேண்டும், நன்னூல், நூலுக்குச் சொல்லப்படும் பத்து அழகுகளில் ஒன்றாக எடுத்துக்காட்டினைக் கூறுவதை,

*"......................... விளங்கு உதாரணத்த(து)*

*ஆகுதல்.............................................."*

*(நன்.13;5-6)*

*என்பதால் பெறப்படும். "மக்களின் நடைமுறைப் பேச்சுக்களினின்றும் வழக்க வொழுக்கங்களினின்றும் இந்த எடுத்துக்காட்டுகள் அமைய வேண்டும் என்பர் அறிஞர்"[23] என்று கூறுவர் வ.சுப.மாணிக்கனார்.*

*பொய்கையாழ்வாரின் பாசுரங்கள் பூதத்தாழ்வாரின் பாசுரங்களுக்கு முன் மாதிரியாகத் திகழ்வதை, "மாமல்லபுரச் சிற்பங்களுக்குக் காஞ்சி கைலாசநாதர் கோயில் முன்மாதிரியென்று கலைச் சுவைஞர்கள் ஊகிக்கின்றார்களல்லவா? அதுபோல என்க"[24] என்று எடுத்துக்காட்டினை நயம்பட உரைப்பர்.*

*திருப்பாணாழ்வார் இயற்றிய அமலனாதிபிரான் பதிகம் இரண்டாம் பாசுரத்தில்,*

*'சிவந்த ஆடையின் மேலே சென்றதாம் என் சிந்தனையே'*

*(அமல.பதி.2:5)*

*என்பதும் முதல் பாசுரத்தில்,*

*'கமலபாதம்' (அமல.பதி.1:5)*

*என்பதும் அமைகின்றது. முதலில் எம்பெருமான் ஆழ்வாரை அடிமை கொள்ள மேல்விழுந்த நிலையும் பிறகு ஆழ்வார் எம்பெருமான் மேல் விழுகின்ற நிலையும் இடம்பெற்றுள்ளது. இதனை, "புதிதாக ஈன்ற பசு முலைச்சுவை அறியாத தன் கன்றுக்கு முதலில் தன் முலையை அதன் வாயில் கொடுக்கும் ; பின்பு சுவடறிந்தால் பசு உதைத்துக் கொண்டாலும் கன்று தானே அதன் மேல் விழும். அங்ஙனமே, திருவடிகள் தாமே வந்து போக்கியமானவாறு கூறினார் முதற்பாசுரத்தில்; இதில் தம்முடைய*

நெஞ்சு சுவடறிந்து மேல் விழுமாறு கூறுகின்றார் என்பதை அநுபவித்து மகிழ வேண்டும்"[25] என்று எடுத்துக்காட்டுடன் விளக்குவர்.

**இலக்கண நயம்**

ஆழ்வார்களின் பாசுரங்களுக்கு விளக்கம் கூறிப் போகும் போது இலக்கணக் குறிப்புகளை நயம்பட எடுத்துரைத்துள்ளார். "சொற்களுக்கு உண்மைப் பொருள் கண்டு கூறுதல், பொருளைத் தெளிவாக அறிந்து கொள்ளுதற்கு இன்றியமையாத இலக்கணக் குறிப்புக்களை விடாமற் சுட்டிச் செல்லுதல் முதலிய பண்புகள் அவர் நடையைச் சிறப்பித்து நிற்கின்றன."[26]

திருப்பாவையில் இடம்பெறும் 'நாமும், நம் பாவைக்குச் சாற்றி நீராடினால்' 'பிள்ளைகள் எல்லாரும் பாவைக்களம் புக்கார்' என்பதில் இடம்பெறும் பாவை என்பதற்கு "பாவையைக் கொண்டு பாவையர் நோன்பு இயற்றப்பெறுவதனால் பாவையின் பெயர் நோன்பிற்கு ஆகி அது நோன்பைப் பற்றிக் கூறும் நூலிற்கு ஆகி வந்தது. இப்படி வருவதை இலக்கண ஆசிரியர் இருமடியாகுபெயர் என்று கூறுவர்"[27] என்பர்.

ஆண்டாள் இயற்றிய திருப்பாவையில் உவமை, உருவகம் ஆகிய அணி நயங்கள் காணப்படுதலை, "கார்மேனிச் செங்கண் கதிர் மதியம் போல் முகத்தான், நாராயணன் (1), முகில் ஊழி முதல்வன்போல் மெய் கறுத்தல், ஆழிபோல் மின்னுதல், வலம் புரிபோல் நின்றதிர்தல் (4), குகையில் உறையும் சிங்கம் தீவிழித்து, வேரி மயிர் பொங்க எப்பாடும் போந்துதறி மூரி நிமிர்ந்து முழங்கில் புறப்பட்டுப் போதல் போல் கண்ணன் வர வேண்டும் எனக் கூறல் (23), அங்கண்மா ஞாலத்தரசர் அபிமான பங்கமாய் வந்து கண்ணனின் பள்ளிகட்டிற் கீழே சங்கம்

இருப்பார் போல் ஆயச்சிறுமிகள் திரளுதல், கிண்கிணிவாய் செய்த தாமரைப் பூப்போல செங்கண் சிறுச்சிறிதே கண்ணன் ஆயர் மகளிரை நோக்குதல் (22), திங்களும் ஆதித்தியனும் எழுந்தாற்போல் அங்கண் இரண்டும் கொண்டு எங்களை (ஆயர் மகளிரை) நோக்க வேண்டுதல் (22), கஞ்சன் வயிற்றில் நெருப்பென்ன நிமிர்ந்த நெடுமால் (25), பாலன்ன வண்ணத்துப் பாஞ்ச சன்னியம் (26) இவையாவும் உவமையணிகள்"[28] என்றும் "யசோதை இளஞ்சிங்கம் (1), வெள்ளத்தரவில் துயிலமர்ந்தவித்து (6), அருங்கலமே (10), குற்றமொன்றில்லாத கோவலர்தம் பொற்கொடி, புற்றரவல்குல் புனமயில் (11), கொம்பனார்க் கொழுந்து, குலவிளக்கு (17), கந்தம் கமழும் குழலி, பந்தார் விரலி (18), கப்பம் தவிர்க்கும் கலி (20), தோற்றமாய் நின்ற சுடர் (21) இவையாவும் உருவகங்கள்"[29] என்றும் மொழிவர்.

திருமங்கையாழ்வாரின்,

"வரைசெய் மாக்களிறு இளவெதிர் வளர்முனை"

(பெரிய திருவந்.15)

என்னும் பாடலில் ஆண் யானை, தன் பெண் யானைக்குத் தேன் தோய்ந்த மூங்கிற் குருத்தைக் கொடுத்து மகிழ்வித்தல் கூறப்பட்டுள்ளது. இதில் "எம்பெருமான் பிராட்டியை உவப்பிக்கும் படியைக் கூறுதல் இதற்கு உள்ளுறைப் பொருள்"[30] என்று விளக்குவர்.

இவ்வாறு உவமை, உருவகம், ஆகுபெயர், உள்ளுறை ஆகிய இலக்கணக் குறிப்புகளை நயம்பட எடுத்துரைக்கப்பட்டுள்ளதை அறியமுடிகிறது.

**தொகுப்புரை**

பெரியாழ்வார், துளப் பாத்திகளுக்குள் கீழே கண்டெடுக்கப்பட்டக் குழந்தையை விரஜையிடம் கொடுத்த நிலையில் பிள்ளைக் கலிதீர பெருமாள் இக்குழந்தையைக் கொடுத்ததாக எண்ணி உவகை அடைதல், பெரியாழ்வார், ஸ்ரீவில்லிபுத்தூரில் எழுந்தருளியிருக்கும் ஆழிலைப் பள்ளியான் மீது கோதை கொண்ட பக்தியைக் கண்டு மகிழ்ச்சியடைதல், ஆண்டாள், தன் மார்பகங்களில் குங்குமக் குழம்பு பூசி அணி செய்து பயனுடையதாகச் செய்ய விரும்பல், திருப்பாணாழ்வார், இறைவனின் அழகை அக புறக்கண்களால் அனுபவித்த நிலையில் வாயில் வெண்ணெய் மணக்கிறது என்றல், பொய்கையாழ்வார், எம்பெருமானையன்றிப் பொருள்களைப் பற்றி அறியும் அறிவு அறிவல்ல என்றல், பூதத்தாழ்வார், பக்திநெறி, பரமபதத்தைப் போன்று இன்பமானதென்றல், திருமழிசையாழ்வாரின் பாசுரத்தில் திருமாலின் பெருமையும், வைணவ தத்துவமும் மாபெருங்கடல் என்றல், திருமழிசையாழ்வார், பெருமானுடைய கால்வலையில் அகப்பட்டவர் என்றல், திருமழிசையாழ்வார், பெருமானின் திருவடியை வணங்குவதற்குத் திருமாலின் அருள் வேண்டுமென்றல் என்று தொடர் நயங்களை எடுத்துரைத்துள்ளார்.

சினம் காப்பதும் காவாததும் ஒன்றுதான் என்றல், வைணவர்களுக்குப் பெருமாளின் திருவடிப்பேறு அடையத்தக்க குறிக்கோள் என்றல், உள்ளம் தெளியத் தெளியக் கடவுள் உண்மையும் தெளிவாகும் ஞானம், மெய்ஞ்ஞானமாகும் என்றல்,

பரஞானம் என்பது பெருமானை நேரில் காணல், நீரை விட்டுப் பிரிந்த மீன்போல் மூச்சு அடங்கும்படி இருத்தல் ‘பரமபக்தி’,

புலன்களை அடக்குவதற்குரிய வழி பக்தி. இறைவனிடத்தில் மனம் சுழித்தோடினால் ஆசைகளும் எண்ணங்களும் தாமே ஓடிப்போகும் என்றல், பெருமானை வழிபடும் போது உள்ளத்தில் தூய்மையும், உள்ளம் களங்கமற்று இருந்தால் பக்தன் உள்ளத்தில் பள்ளியும் கொள்வான் என்றல், திருவேங்கட மலையிடத்து ஆழங்கால்பட்டதைக் கூறல், பிறவிப் பயனைக் கடக்க வேண்டுமென்றல், பாகவதர்களின் ஸ்ரீபாத தீர்த்தத்தை உட்கொள்ளல், எல்லாப் பாவங்களும் பரிகாரம் ஆவதற்குரிய கழுவாயென்றல், உடம்பைக் கொடிய தவத்தாலும் விரதத்தாலும் வதைத்து உடம்பை எலும்புக் கூடாக்குவது அறியாமை என்றல், பரமான்மாவுக்கும் சீவான்மாவுக்கும் உள்ள உறவுமுறை தாய்க்கும் சேய்க்கும் உள்ள உறவுமுறை போன்றதென்றல், பொய்கையாழ்வார், பூதத்தாழ்வாரின் பாசுரங்களுக்கு முன்மாதிரியாகத் திகழ்வதை மாமல்லபுரச் சிற்பங்களுக்குக் காஞ்சி கைலாசநாதர் கோயிலை எடுத்துக்காட்டல், எம்பெருமான், ஆழ்வாரை அடிமை கொள்ள மேல் விழுந்த நிலையும் ஆழ்வார், எம்பெருமான்மேல் விழுகின்ற நிலையும் எடுத்துக்காட்டல் ஆகியனவற்றைக் கூறியுள்ளார்.

ஆகுபெயர், உவமை, உருவகம், உள்ளுறை ஆகிய இலக்கணக் குறிப்புகளை நயம்பட எடுத்துக்காட்டியுள்ளார்.

## சான்றெண் விளக்கம்

1. ந.சுப்புரெட்டியார், ஆழ்வார்களின் ஆரா அமுது, ப.3

2. மேலது, ப.5

3. மேலது, ப.41

4. மேலது, ப.73

5. மேலது, ப.120

6. மேலது, ப.135

7. மேலது, ப.179

8. மேலது, ப.182

9. மேலது, ப.191

10. மேலது, பக்.54-55

11. மேலது, ப.63

12. மேலது, ப.122

13. மேலது, ப.122

14. மேலது, ப.138

15. மேலது, ப.140

16. மேலது, ப.145

17. மேலது, பக்.145-146

18. மேலது, ப.174

19. மேலது, பக்.201-202

20. மேலது, ப.210

21. மேலது, ப.184

22. மேலது, ப.277

23. வ.சுப.மாணிக்கம், ஒப்பியல் நோக்கு, ப.115

24. ந.சுப்புரெட்டியார், ஆழ்வார்களின் ஆரா அமுது, ப.125

25. மேலது, ப.63

26. வி.செல்வநாயகம், தமிழ் உரைநடை வரலாறு, ப.58

27. ந.சுப்புரெட்டியார், ஆழ்வார்களின் ஆரா அமுது, பக்.17-18

28. மேலது, ப.27

29. மேலது, ப.27

30. மேலது, ப.103.

# பல்துறைப் புலமை

படைப்பாளர்கள் கருத்துகளைத் தெளிவாகவும் பிறர் அறியும் வகையிலும் எடுத்துரைக்கும் திறமை கொண்டுள்ளனர். நூலின் கருத்தையோ அல்லது செய்யுட் கருத்துகளையோ எடுத்துரைப்பதற்கு பல்துறை அறிவுக் கூறுகள் இன்றியமையாதன. அவ்வகையில் ந.சுப்புரெட்டியார் வடமொழிப் புலமை, உவமைகளை எடுத்துக் காட்டல், பெயர் விளக்கம் கூறல், பிறர் கருத்தை எடுத்துக் காட்டல், வினா-விடையை எடுத்தாளுதல், பன்னூற் புலமை, இலக்கணப் புலமை ஆகியவற்றைக் கொண்டவராகத் திகழ்வதை அறிவது இவ்வியலின் நோக்கமாகும்.

**வடமொழிப் புலமை**

வடமொழி, “சமஸ்கிருதத்துக்கு வழங்கப்படும் தென்னிந்திய பெயர். இந்தியாவின் வடக்குப் பகுதியில் பழக்கத்தில் உள்ள மொழிகள் பலவும், இந்தோ - ஆரிய குடும்பத்தைச் சேர்ந்தவையாகும். இவற்றுக்கான தாய்மொழி சமஸ்கிருதமாகும். திராவிட மொழிகளில் தாய்மொழியான தமிழ் புழக்கத்தில் உள்ள பகுதிகளில், சமஸ்கிருதம் வடமொழி என்று குறிக்கப்பட்டது. வடமரத்தின் (ஆலமரம்) கீழிருந்து, பண்டையக் காலத்தில் கல்வி போதிக்கப்பட்டதால், இவ்வாறு பெயர் ஏற்பட்டது என்பர். குரு - சீடர் முறையில் சமஸ்கிருத பாடங்கள் உபதேசிக்கப்பட்டன. இத்தகைய பரம்பரைக்குத் தொடக்கமாக, ஆல மரத்தடியில் அமர்ந்த தட்சிணாமூர்த்தியை முதல் கடவுளாகக் கொள்வது வழக்கம். எனவேயும், ஆலமர மொழி என்பது ஏற்பட்டிருக்கக்கூடும். பேச்சு வழக்கில் இருந்த மொழியிலிருந்து வேறுபடுத்திக் காட்டுவதற்கு, இந்தப் பயன்பாடு தோன்றியது என்பது

அறிஞர் கருத்து."[1] "தமிழ் இலக்கண இலக்கிய அறிவோடு, வரலாற்று அறிவும் வடமொழி அறிவும் இன்றியமையாதனவாகும்."[2] இவ்வகையில் சொற்களையும் சொற்றொடர்களையும் எடுத்துக்காட்டும் போது வடமொழிச் சொற்களைப் பயன்படுத்துகிறார்.

ஸ்ரீ வில்லிபுத்தூரிலுள்ள நந்தவனத்தில் கண்டெடுக்கப்பட்ட தெய்வக் குழந்தைக்கு பெரியாழ்வார், கோதை என்று பெயரிட்டு வளர்த்து வந்தார். ஆண்டாள், இளமையில் கலைகள் முழுவதும் தன்னிடத்து நிரம்பப் பெற்ற நிலையில் பெரியாழ்வாரைப் போன்று கண்ணனிடத்துப் பக்தியில் ஈடுபடுகிறாள். தக்க வயது எய்தியதும் குழந்தைக்குப் பஞ்ச சம்ஸ்காரங்களைச் செய்து வைத்ததைக் குறிப்பிடும் போது, "பஞ்ச சம்ஸ்காரம் ; தாபம் ; புண்ட்ரம், நாமம், மந்திரம், யாகம் என்ற ஐந்தும் புறச் சுத்தியாக ஆசாரியன் மூலமாகப் பெறுதல். தாபம்-சங்க சக்கரங்களைத் தோளில் சுட்டுத் தரித்துக் கொள்ளல். புண்ட்ரம்-மேனோக்கி இட்டுக் கொள்ளும் திருமண்காப்பு அணிதல். நாமம்-இராமாநுசதாசன் என்ற தாஸ்ய நாமம் பெறுதல். மந்திரம்-எட்டெழுத்து மந்திர உபதேசம் பெறுதல். யாகம் - பகவதாசாதனம், எம்பெருமானை வழிபடுதல்"[3] என்று பஞ்ச சம்ஸ்காரங்களைக் குறிப்பிட்டு ஒவ்வொரு வடமொழிச் சொல்லுக்கும் விளக்கம் கூறுவர்.

திருப்பாவை, நாச்சியார் திருமொழி இவ்விரு நூற்பெயர்களில் வரும் 'திரு' என்ற அடைமொழிக்கு விளக்கம் கூறுமிடத்து 'புருஷகார பூதையான' திருமகள் வழிபாடு என்று குறிப்பிட்டு, "புருஷகார பூதை-பரிந்துரை கூறுபவள். புருஷகாரம் - தகவுரை"[4] என்பர்.

ஆன்ம அணியாகச் சேஷத்துவச் செல்வத்தையும் எம்பெருமான் முன் பதுமை போன்று கிடக்கும் பாரதந்திரியப் பெட்பையும்

குறிக்கின்றமையால் திருப்பாவை எனப் பெயர் பெற்றது எனக் குறிப்பிட்டு சேஷத்துவம், பாரதந்திரியம் ஆகிய வடசொற்களுக்கு, "சேஷத்துவம் : பிறருக்கு (எம்பெருமானுக்கு) அடிமையாக இருத்தல். பாரதந்திரியம் : பகவானுக்கு வசப்பட்டிருத்தல்"[5] என்று விளக்கம் கூறுவர்.

ஆன்மா அடையும் பயனிற்குத் தடைக்கல்லாக இருப்பவை ஆன்ம விரோதி, பரத்துவ விரோதி, புருஷார்த்த விரோதி, உபாய விரோதி, பிராப்ய விரோதி என்பனவாகும். இத்தகைய வடசொற்களின் பொருள் விளக்கமாக, "ஆன்ம விரோதி என்பது தேகமே ஆன்மா என்ற மனமயக்கமும் எம்பெருமானையொழிந்தவர்கள் பக்கல் சேஷம் என்றிருக்கையும், தானே சுதந்திரன் என்றிருக்கையும் ஆகும். பரத்துவ விரோதி என்பது பிற தெய்வத்தைப் பரம் என்றும், எம்பெருமானுக்குச் சமம் என்றும், திருமாலினது அவதாரங்கள் வெறும் மானிடத் தன்மையன என்றும், அர்ச்சைகளுக்குப் பயன்களைப் பயக்கும் சக்தி இல்லையென்றும் எண்ணுதலாகும். புருஷார்த்த விரோதி என்றும், பகவத் கைங்கரியங்களை விட வேறு புருஷார்த்தங்களில் விருப்பமும், தனக்கு விருப்பமான பகவத் கைங்கரியத்தில் இச்சையும் ஆகும். உபாய விரோதி என்று, ஏனைய உபாயங்கள் சிறப்புற்றன என்ற எண்ணமும், சித்தோபாயம் சிறு முயற்சியால் சாதிக்கத்தக்கதாயிருத்தலாலும், உபேயம் அரிய முயற்சியால் சாதிக்க யுக்தமாக இருத்தலாலும், இடையூறுகள் பலவகையாக இருத்தலாலும் உண்டாகும் ஐயங்களாலாகும். பிராப்ய விரோதி என்பது இப்பிறப்பிற்கு ஏதுவாகிய பிராப்ய கர்மமாக வந்த சரீரத்துடன் சம்பந்தமும், அநுதாபலேசமும் இல்லாததாய்,

*பெருத்ததாய், திடமாயுமுள்ள பகவதபசார பாகவதபசார பொறுக்க முடியாத அபசாரங்களாகும்"[6] என்று கூறுவர்.*

*ஆண்டாள், கண்ணன் தன்னை வந்து அடைய வேண்டிக் குயிலைக் கூவ வேண்டுகிறாள். குயிலும் கூவவில்லை. கண்ணனும் முகம் காட்டவில்லை. இவ்வாறு இருந்தால் இவள் உயிர் வாழ மாட்டாள் என்று எண்ணிய கண்ணன் அவள் கனவில் திருமணக் காட்சியைக் காட்டுகின்றான். ஆண்டாள் அக்கனவில் கண்டு அனுபவித்தவற்றைத் தன் உயிர்த் தோழிக்கு "அந்தணர்கள் காப்புநாண் (கங்கணம்) கட்டவும்"[7] "கண்ணன் கையின் மேல் தன் கையை வைத்துப் பொரிகளை அள்ளித் தெளிக்கவும் (லாஜஹோமம்)"[8] என்றுரைக்கிறாள். இதில் கங்கணம், லாஜஹோமம் ஆகிய வடசொற்களைப் பயன்படுத்தியுள்ளார்.*

*திருப்பாணாழ்வார், தன் இசைக் கருவியால் திருவரங்கன் சந்நிதியை நோக்கிப் பாடிக்கொண்டிருக்கிறார். அந்நிலையில் அரங்கப் பெருமானுக்குத் தீர்த்த கைங்கரியம் செய்யும் லோகசாரங்கர், பொற்குடத்தில் நீர் கொண்டு செல்கிறார். இதில் இடம்பெறும் கைங்கரியம் என்பதற்கு, "கிங்கரன் - அடிமையாள் ; கிங்கரன் செய்யும் தொழில் அடிமைத் தொழில் ; அதாவது கைங்கரியம்"[9] என்பர்.*

*இறையருள் தம்மீது வெள்ளம் கோத்துப் பாய்ந்து தமது பாரமான "பழவினைகளைப் (சஞ்சித கர்மங்களை)"[10] பற்றறுத்தது.*

*திருபபாணாழ்வார் பாம்பணையைக் கை விட்டுத் திருமதுரையில் வந்து பிறந்த கண்ணபிரான் தேர்த்தட்டில் நின்று சொன்ன "வார்த்தையை (சரமசுலோகத்தை)"[11] மெய்யென்று நம்பி மோசம் போனேன் என்பர்.*

*அரங்கப் பெருமானுக்குத் தீர்த்த கைங்கரியம் செய்யும் லோக சாரங்கர் என்பார் பொற்குடத்தில் "திருமஞ்சனம் (நீர்)"[12] கொண்டு சென்றார்.*

*திருமால் தொல்லைத் தீவினைகளை வாசனையோடு கூட வேரறுத்து அடியேனைக் "குற்றமற்றவனாக்கித் (நிஷ்கல் மஷனாக்கி)"[13] தன்னிடத்தில் பட்சபாதமுடையவனாக ஆக்கிக்கொண்டார்.*

*"வாயிலுக்கும் வீட்டிற்கும் இடைப்பட்ட ஒடுக்கமான இடம் வடமொழியில் இது 'தேஹளி' என்று வழங்கப்பெறும்."[14]*

*எம்பெருமானை உள்ளீடாகக் கொள்ளாது செய்கின்ற "சொபம்-தவம்"[15] பயனற்றதாகும்.*

*மேலும், 'செங்கண்மால்' என்பதற்கு "வாத்சல்யாமிர்தத்தை (உருக்கமான அன்பாகிய அமிர்தத்தை)."[16]*

*"பாம்பணைப் பள்ளியானை (க்ஷேசாயியை)"[17]*

*இறைவனை அடையும் வழி "'இதம்' (ஹிதம்)"[18]*

*"அநந்யார்ஹ சேஷபூதன் - பிறர்க்கு அடிமையாகாது எம்பெருமான் ஒருவனுக்கே அடிமையாக இருப்பவன்"[19]*

*யசோதை ஒருவித நோன்பும் நோற்காமல் "எதிர்பாராமல் (யாத்ருச்சிகமாகவே)"[20]*

*வண்ணச் செஞ்சிறு விரல்களனைத்தாலும் அடிசிலை வாரி அமுது செய்யும்போது வாயது கையதாக மிகுந்த "'மிச்சலை' (க்ஷேத்தை)யும்"[21] உண்ணப் பெற்றிலேன்.*

ஆட்டின் தாடையில் தொங்கும் "முலை (அதர்)"[22]

மாலை என்பது "மயக்கம் (வியாமோகம்)"

"சீவான்மா பரமான்மாவின் உடைமை (ஸ்வஸ்வாமி சம்பந்தம்)"[24] என்று பல்வேறு இடங்களில் வடமொழிச் சொற்களைத் தமிழிலும் தமிழ்ச் சொற்களை வடமொழியிலும் கூறியுள்ளார்.

**உவமை**

பொருளைச் சிறப்பித்துக் கூறுமிடத்து அதனோடு ஒப்புமையுடைய வேறொரு பொருளோடு ஒப்பிடுவது உவமையாகும். இவ்வாறு உவமித்துக் கூறுவதனால் புரியாதன எளிதில் புரியும். கேட்டார்க்கு இன்பம் விளையும். சிறப்பிக்கப்படும் பொருள் உவமேயம். அதற்கு ஒப்பாகக் காட்டப்படும் பொருள் உவமை. இதனை உவமானம் என்றும் கூறுவர். தொல்காப்பியம்,

"உவமையும் பொருளும் ஒத்தல் வேண்டும்" (தொல்.1229)

என்று குறிப்பிடும். இதற்கு உரை இயற்றிய ஆ.தமிழண்ணல் "உவமானமும், பொருளும் தம்முள் ஒத்தன என்று உலகத்தார் மகிழ்ச்சி செய்தல் வேண்டும்"[25] என்பர்.

"உயர்ந்ததன் மேற்றே உள்ளுங்காலை" (தொல்.1224)

என்னும் தொல்காப்பிய நூற்பாவிற்கு உரை இயற்றிய இளம்பூரணர், "உவமையானது உவமிக்கப்படும் பொருளை விட உயர்ந்ததாக இருக்க வேண்டும்"[26] என்று குறிப்பிடுவர்.

உவமை குறித்து அர.சிங்காரவடிவேலன், "'உவமை' என்ற தமிழ்ச் சொல் 'உவமம்' என்றும் 'உவமானம்' என்றும் வழங்கும். ஆங்கிலமொழியில் அதனை 'SIMILE' என்பர். வடமொழியில் 'உபமா' என்பர். 'உவமானம்'

என்ற தமிழ்ச்சொல்லின் திரிபே உபமானம் என்று ஆயிற்று"[27] என்பர். பொருளைப் புலப்படுத்தக் கூடிய வகையில் உவமை அமைவதை, "தெரிவிக்க விரும்பும் பொருளைத் தெரிந்த பழைய பொருளோடு, போல, புரைய என்பன போன்ற இணைப்புச் சொற்களால் ஒப்பிட்டு விளக்குவதே உவமையாகும்."[28] மேலும் உவமையின் பயனை இளம்பூரணர், "இதனாற் பயன் என்னோ எனின் புலன் அல்லாதன புலனாதலும் அலங்காரமாகிக் கேட்டார்க்கு இன்பம் பயத்தலும்"[29] என்பர்.

**பிரசாதமும் பெண்மகவும்**

பெரியாழ்வார், ஸ்ரீவில்லிபுத்தூரில் திருத்துழாய் பாத்தியமைத்தற்காக நந்தவனத்தைக் களைக்கொட்டு கொண்டு தோண்டும் போது நிலத்தடியில் சீதேவி - பூதேவியின் அம்சமாகப் பெண் மகவு கிடைக்கிறது. மக்கட் செல்வம் வாய்க்கப் பெறாத பெரியாழ்வாருக்கு இறைவன் கொடுத்த செல்வமாகத் தோன்றுகிறது. இறைவன் பெயரால் வளர்ப்பது தன் கடமை என்று கருதித் தன் இல்லத்திற்குக் கொண்டுவருகிறார். அப்போது பெரியாழ்வாரின் தேவியான விரஜை அவரை எதிர்கொண்டழைத்து உள்ளம் உருகி, "திருக்கோயிலிலிருந்து அவர் கொண்டுவரும் பிரசாதத்தைப் பெற்றுக் கொள்வதைப் போல் இரண்டு கைகளாலும் பயபக்தியுடன் வாங்கிக் கொண்டாள்"[30] என்று கூறுவர்.

இதில் விரஜை, தன் இரு கைகளாலும் ஆண்டாளாகிய பெண் மகவைப் பெற்றுக்கொள்வதைக் கோயிலிலிருந்து கொண்டுவரும் பிரசாதத்தைப் பெற்றுக்கொள்வதற்கு ஒப்புமைப் படுத்தப்பட்டுள்ளது.

**பூங்கொடியும் கோதையும்**

கோதை, நந்தவனத்திற்குச் சென்றபோது மரத்தைச் சுற்றிப் படர்ந்திருந்த பூங்கொடி ஒன்று அவள் கண்ணில் படுகிறது. தானும் ஒரு கொள்கொம்பைப் பற்றிப் படரவேண்டுமென்று உணர்ந்து கொள்கிறாள். இளம் வயதில் தன் உள்ளத்தில் கண்ணனின் உருவை நினைத்த அளவில், "யுவதியாக வளர்ந்த பிறகு கோதையின் காதல் நிமிடத்திற்கு நிமிடம் அதிகரித்து வளரத் தொடங்கியது. நாளடைவில் காதல் இவளை முற்றும் விழுங்கிவிட்டது. தான் படர்வதற்கு வேண்டிய கோலைத் தேடிக் குழைந்து வளையும் பூங்கொடி போலானாள்"[31] என்பர்.

இதில் கோதை கொள்கொம்பாகிய கண்ணனை அடைய வேண்டுமென்று நினைப்பதை, மரத்தைச் சுற்றிப் படரும் பூங்கொடிக்கு உவமையாக்கப்பட்டுள்ளது.

**காந்தமும் ஆண்டாளின் உள்ளமும்**

பெரியாழ்வார், பெருமாள் ஆண்டாளை மணத்தல் கூடுமோவென்று சிந்தித்த வண்ணம் இருக்கிறார். அப்போது திருவரங்கப் பெருமான் இவரின் கனவில் தோன்றி ஆண்டாளைக் கோயிலுக்கு அழைத்து வருமாறும் அவளை ஏற்றுக் கொள்வோமென்றும் கூற இருவரும் திருவரங்கத்திற்குப் பயணப்படுகின்றனர். அச்செய்தி அறிந்த பாண்டிய மன்னன் திருமண விழாவைத் தானும் உடனிருந்து நடத்தவேண்டுமென்று எண்ணிய நிலையில் ஸ்ரீவில்லிபுத்தூரரையும் திருவரங்க நகரையும் விழாக்கோலம் பூணச் செய்கிறான். ஆண்டாளை மணிச்சிவிகையில் எழுந்தருளச் செய்து திருவரங்கக் கோயிலை அடைகிறான். பெருமாளின் முன்மண்டபத்தில் ஆண்டாளை நிறுத்திப் பெருமாளை

வணங்கச் செய்கின்றனர். "பெரியபெருமாளின் பேரழகு இரும்பை ஈர்க்கும் காந்தம் போல ஆண்டாளைக் கவர்ந்தது"[32] என்றுரைப்பர்.

இதில் பெருமானின் பேரழகு ஆண்டாளின் உள்ளத்தைக் கவர்ந்ததற்கு இரும்பை ஈர்க்கும் காந்தம் உவமை கூறப்பட்டுள்ளது.

**பள்ளமடை நீரும் காதற் பெருக்கும்**

ஆண்டாள் அருளிய நாச்சியார் திருமொழி, திருமாலைத் தவிர வேறொன்றும் கலவாதிருத்தல், இறைவனின் ஆண்மையிலும் தம் பெண்மையிலும் இடையறாது மனத்தைச் செலுத்துதல், தன் ஆன்மாவின் பெண்மை நிலைக்குத் தக்கவாறு செயல்படுதல் ஆகிய பண்புகள் நிறைந்திருக்கக்கூடியது. ஆண்பாலாரான மற்றைய ஆழ்வார்கள் தம்மை நாயகியாகவும் திருமாலை நாயகனாகவும் கொண்டு அமைந்திருப்பதால் இயற்கையானதன்று என்றும் ஆழ்வார்கள், திருமாலிடம் கொண்ட அன்பு மேட்டுமடைநீர் போன்றதென்றும் பெரியோர் கூறுவர். ஆனால், "ஆண்டாள் பெண்பாலராய்ப் பிறந்து ஒன்றையும் ஏறிட்டுக் கொள்ளாமல் அழகிய மணவாளனையே தம் நாயகனாக வரித்துக் கொண்டு அவனிடம் உள்ளுருகிச் செலுத்தும் இவருடைய இயற்கையான காதற் பெருக்கு பள்ளமடைநீர் போன்றதென்றும் அன்னார் கூறுவர்"[33] என்பர்.

இதில் ஆண்டாள் மணவாளனாகியத் திருமாலை நாயகனாகக் கொண்டு அவனிடம் உள்ளுருகிச் செலுத்தும் காதல் பெருக்கினைப் பள்ளமடை நீருக்கு ஒப்புமைப்படுத்தப்பட்டுள்ளது.

**சிறுவர்களின் பிடிவாதமும் ஆண்டாளின் பிடிவாதமும்**

ஆண்டாள், தன் ஆற்றாமையை மேகவண்ணனிடம் சென்று உரைக்குமாறு மேகத்தைத் தூது விடுக்கின்றாள். அந்நிலையில், "ஒரு

பொருளின் மீது விருப்பமுள்ள சிறார்களைப் பெற்றோர் எவ்வளவு சமாதானப்படுத்தினாலும் அவர்கள் சமாதானம் அடைவதில்லை. விரும்பின பொருளைப் பெறும் வரையிலும் விடாத பிடிவாதம் கொள்வதுபோல் என் இளங்கொங்கைகளும் அவ்வெம்பெருமானுடன் அணைய வேண்டும் என்று பிடிவாதம் பிடிக்கின்றன"[34] என்கிறாள் என்பர்.

இதில் ஆண்டாள், பெருமானுடன் அணைய வேண்டுமென்று பிடிவாதம் பிடித்தல், சிறார்கள் விரும்பின பொருளைப் பெறும் வரைக்கும் பிடிவாதம் பிடித்தலுக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

**உலங்கும் பெருமானும்**

ஆண்டாள், தன் ஆற்றாமையை எடுத்துக்கூற வேண்டி மேகத்தைத் தூது விடுக்கும்போது, "உலங்கு என்கின்ற பெருங்கொசுக்கள் விளாம்பழத்தில் மொய்த்தால் அதன் சாறெல்லாம் சுவறிப் போவதுபோல் என் உடம்புடன் அணைந்து என் ஆற்றல் முழுவதையும் கொள்ளை கொண்ட பெருமானுக்கு நான் இங்ஙனம் நோவு பட்டுக்கிடக்கும் நிலையை எடுத்துக் கூறுங்கள்"[35] என்றுரைப்பதாகக் கூறுவர்.

இதில் பெருமாள், ஆண்டாளை உடம்புடன் அணைந்து ஆற்றலைக் கொள்ளை கொள்ளுதல் உலங்கு என்கிற கொசு விளாம்பழத்தில் மொய்த்து அதன் சாறெல்லாம் வற்றிப் போவதற்கு உவமையாக்கப்பட்டுள்ளது.

**எருக்கம் பழுப்புகளும் ஆண்டாளின் நிலையும்**

ஆண்டாள், தன் ஆற்றா நிலையைப் பெருமானிடம் எடுத்துரைக்க வேண்டி மேகத்திடம், "இராமநாமங்களைச் சொல்லி மழைக் காலத்தில்

எருக்கம் பழுப்புகள் அற்று விழுவதுபோல் ஒசிந்து கிடக்கின்றேன்"[36] என்று தான் ஏங்கி நிற்கும் நிலையைக் கூறுவர்.

இதில் ஆண்டாள், இராமநாமங்களைச் சொல்லிச் செயலற்றிருப்பதற்கு மழைக் காலத்தில் எருக்கம் பழுப்புகள் அற்று விழுதல் உவமையாக்கப் பட்டுள்ளது.

**வெண்ணெயும் திருப்பாணாழ்வாரின் உள்ளமும்**

திருப்பாணாழ்வாரின் உள்ளமானது அரங்கநாதரை நினைத்துக் கொண்டிருக்கிறது, "வெண்ணெய் போல் உருகக் கூடிய உள்ளத்தைக் கவர்ந்து அந்த மகா சக்தி அருள் செய்து கொண்டிருப்பதை அவர்தம் உள்மனம் தெளிவாக அறிந்துகொண்டது"[37] என்பர்.

இதில் திருப்பாணாழ்வாரின் உள்ளத்திற்கு வெண்ணெய் உவமையாக்கப்பட்டுள்ளது.

**புலியைப் பார்த்துப் பூனை சூடு போட்டுக்கொள்ளலும் தொண்டர் வேடம் பூணலும்**

திருப்பாணாழ்வார், இசைக்கருவியை மீட்டுத் திருவரங்கன் சன்னிதிக்கு முன்னின்று இசைபாடிக் கொண்டிருக்கிறார். அப்போது அவரிடத்து லோகசாரங்க மாமுனிவர் சினம் கொண்டு தூரச் செல்லுமாறு கூறுகிறார். திருப்பாணாழ்வார் பக்தி நிலையில் இருந்ததால் அவர் கூறியதை கவனத்தில் கொள்ளவில்லை. அப்போது முனிவருடன் வந்தவர்களுள் சிலர் அவனுக்குக் காது செவிடோவென்று கூறுகின்றனர். மேலும், "புலியைப் பார்த்து பூனை சூடு போட்டுக் கொண்டது போல், தொண்டர் வேடம் தாங்கிக் கொண்டிருக்கின்றாயோ?' என்று வாயில் வந்தபடி வசை மாரி பொழிந்தார்கள்"[38] என்று மொழிவர்.

இதில் தொண்டர் வேடம் பூண்ட திருப்பாணாழ்வாருக்குப் புலியைப் பார்த்துப் பூனை சூடு போட்டுக் கொள்ளுதல் ஒப்புமையாக்கப் பட்டுள்ளது.

**தேவர்கள் பூமாரி பொழிதலும் சோலையில் மலர்கள் வீழ்தலும்**

லோகசாரங்க மாமுனிவர், திருப்பாணாழ்வாரைத் தோளில் சுமந்துகொண்டு திருவரங்கத் திருக்கோயிலுக்கு வருகிறார். திருப்பாணாழ்வார், யாழை மீட்டிப் பாடியவாறு தம்மை மறந்த நிலையில் இருக்கிறார். "அவர்கள் சோலை வழியாகச் செல்லும்போது செடிகளிலும் மரங்களிலும் பூத்துக் குலுங்கிய மலர்கள் வீழ்ந்தன. இது தேவர்கள் பூமாரி பொழிந்ததுபோல் தென்பட்டது முனிவருக்கு"[39] என்றுரைப்பர்.

இதில் சோலையிலுள்ள மலர்கள் வீழ்தலுக்குத் தேவர்கள் பூமாரி பொழிதல் ஒப்புமையாக்கப்பட்டுள்ளது.

**கோபாலனின் குழல் இசையும் திருப்பாணாழ்வாரின் யாழிசையும்**

திருப்பாணாழ்வார், கோவிந்தனை யாழிசையால் மகிழ்வித்தலுக்கு கோபாலன் கோக்களை குழல் இசையால் மகிழ்வித்தலுக்கு ஒப்புமைப்படுத்தும் போது, "கோபாலன் குழல் இசையால் கோக்களை மகிழ்வித்தது போல் அந்தக் கோவிந்தனை யாழிசையால் மகிழ்வித்த இந்த ஆழ்வார் இவ்வுலகில் நடையாடின காலம் ஐம்பது ஆண்டு"[40] என்பர்.

**பச்சை மாமலையும் பெருமாளின் மேனியும்**

திருப்பாணாழ்வார், பெருமானின் பவளவாயில் ஆட்கொண்ட நிலையில், "திருவாழி திருச்சங்குகளையுடையவனாய், திருத்துழாய்

மாலை அணிந்த நீள் முடியினால் அலங்கரிக்கப் பெற்றவனாய், திருவரங்கத்தில் திருவனந்தாழ்வான் மீது பள்ளிகொள்பவனாய், நம் போன்றவர்களும் ஊனக் கண்ணால் காணும்படியாகக் காட்சிதரும் பச்சைமாமலை போன்ற மேனியின் அழகிற்குத் தப்பமுடிந்தாலும், அடியார்களின் நலன்களை வினவத் துடித்துக் கொண்டிருக்கும் திருவாயின் அழகிற்குத் தப்ப முடியாது"[41] என்பர்.

இதில் பெருமாளின் மேனி அழகிற்குப் பச்சைமாமலை உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

**அரசர்களை மலரிட்டுப் பணிதலும் பெருமாளை மலரிட்டுப் பணிதலும்**

பூதத்தாழ்வார், பெருமானை மலரிட்டுப் பணிந்து வணங்குவதை அரசர்களை மகிழ்விக்க விரும்புபவர்கள் தாமரை மலர்களைக் கொண்டு பணிவதற்கு ஒப்புமைப்படுத்தும்போது, "அரசர்களை மகிழ்ச்சியுறும்படி செய்ய விரும்புபவர்கள் தாமரை முதலிய நல்ல மலர்களைக் கொண்டு பணிவார்கள். அதுபோலவே தாமும் எம்பெருமானை நல்லதொரு மலரிட்டுப் பணிந்தமையைச் சொல்லுகின்றார்."[42] என்றுரைப்பர்.

**பட்டமரம் தழைத்தலும் திருமழிசையாழ்வாரின் நம்பிக்கை தழைத்தலும்**

திருமழிசையாழ்வார், பேயாழ்வாருடன் மனம்விட்டுப் பேசுமிடத்து மனக்குழப்பம் தெளிகின்றது. உண்டு என்பதை இல்லை என்றும், இல்லை என்பதை உண்டு என்றும் சித்தாந்தம் செய்வதற்குத் தாய்மொழியைப் பயன்படுத்துவதைக் காட்டிலும் மனமுருகி இறைவனை வழிபாடு செய்வது நல்லதென்று உணர்கின்றார். "சித்திகளில் புத்தியைச் செலுத்திப் பிறரையும் மயக்கித் தம்மையும் மயக்கிக்கொள்வதைவிட மேலான இலட்சியம் உண்டென்பது

*அவருக்குப் புலனாகின்றது. பட்டமரம் தழைப்பது போலத் தழைக்கத் தொடங்குகின்றது அவர்தம் நம்பிக்கை”*[43] என்று மொழிவர்.

*இதில் திருமழிசையாழ்வாருக்கு நம்பிக்கை மென்மேலும் தழைப்பதற்கு பட்டமரம் தழைப்பது ஒப்புமையாக்கப்பட்டுள்ளது.*

**யசோதைப் பிராட்டி அழகருக்குக் கொடுத்த முத்தச் சுவடும்**
**பெருமாளின் திருப்பவளத்தின் வெண்ணெய் சுவடும்**

*பெருமாளின் திருமேனியில் வெண்ணெய் உண்ட நாற்றம் திகழ்வதை, “கூரத்தாழ்வான் தன்னுடைய சுந்தர பாஹுஸ்வத்தில் பண்டு யாசோதைப் பிராட்டி முத்தம் கொடுத்த சுவடு இன்னும் அழகரின் திவ்விய கண்ணங்களில் திகழா நிற்கும் என்று அநுபவித்தாற் போல, இவரும் பண்டு கண்ணன் வெண்ணெய் உண்டமுடை நாற்றம் இன்றும் பெரியபெருமாள் திருப்பவளத்தில் கமழா நிற்பதாக அநுபவிக்கின்றார்”*[44] என்பர்.

*இதில் பெருமாளின் திருப்பவளத்தில் வெண்ணெய் நாற்றம் திகழ்வதற்கு யசோதைப் பிராட்டி முத்தம் கொடுத்த சுவடு அழகரின் கன்னங்களில் திகழ்தல் உவமையாக்கப்பட்டுள்ளது.*

**வானநூல் அறிஞர்களும் பக்தர்களும்**

*ஆழ்வார்களுக்கு முதிர்ந்த பக்திநிலை ஏற்பட்ட நிலையில் ஆழ்வார்களுக்கும் இறைவனுக்கும் அறுபடாத தொடர்பு ஏற்படுகின்றது. பிறகு இந்நிலையில் புதிய ஆற்றல் தோன்றுகிறது, “வானநூல் அறிஞர்கள் பூமியின் சிறுமையையும் அதை ஈர்த்து நிற்கும் கதிரவனின் பெருமையையும் உணர்வது போல், பக்தர்களும் சமுசாரத்தில் உழலும் தன் ஆன்மாவின் சிறுமையையும், எல்லா உயிர்களையும் புரக்கும் இறைவனின் பெருமையையும் பேராற்றலையும் உணர்கின்றனர்”*[45] என்றுரைப்பர்.

இதில் பக்தர்கள் ஆன்மாவின் சிறுமையையும் இறைவனின் பெருமையையும் பேராற்றலையும் உணர்வது வானநூல் அறிஞர்களின் திறமைக்கு ஒப்பிடப்பட்டுள்ளது.

**இயற்கை நிகழ்வுகளும் ஞானமும்**

பொய்கையாழ்வாரின் உள்ளமானது பெருமானை நோக்கிக் கொண்டிருக்கக் கூடியது, "ஆறுகளானவை கடலையே நோக்கிச் செல்வதும், தாமரை மலர் கதிரவனையே நோக்கி மலர்வதும், உயிர்கள் எமதர்மனையே சென்று கிட்டுவதும் முறையாக நிகழ்வதைப் போலவே, ஞானம் என்பதும் திருமாலைப் பற்றியல்லது பிறவற்றைப் பற்றி நில்லாது"[46] என்று கூறுவர்.

இதில் ஞானம் திருமாலைப் பற்றியிருப்பதற்கு ஆறுகள் கடலை நோக்கியும் தாமரை மலர் கதிரவனை நோக்கியும் உயிர்கள் எமதர்மனைச் சென்று கிட்டுவதும் உவமையாக்கப்பட்டுள்ளன.

**தாமரை மலரும் திருக்கண்களும்**

குலசேகரப்பெருமாள், பெருமாளின் திருக்கண்களுக்குத் தாமரை மலரை ஒப்புமைப்படுத்தும்போது, "குளிர்ந்த அழகிய தாமரை மலரையொத்த அழகிய திருக்கண்களையுடைய கண்ணபிரானே"[47] என்பர்.

இவ்வாறு ந.சுப்புரெட்டியார் பல்வேறு உவமைகளை எடுத்துரைத்துப் பொருள்களைத் தெளிவுபடுத்தியமை அறியப்பெறுகிறது.

**பொருள் விளக்கம்**

இறைவனின் சிறப்புகள் வெளிப்படையான பொருளைத் தருவதோடு நுட்பமான பொருளையும் உணர்த்தக் கூடியன.

நாச்சியார் திருமொழியில் இடம்பெறும்,

'கூடிடு கூடலே' (நாச்.திரு.4:4)

என்பதற்கு, "'நீ கூடி என்னையும் கூட்டு' - என்பது வியாக்கியான ஸ்ரீ சூக்தி - 'கூடலை' நோக்கிப் பேசுவது. 'அவன் எழுந்தருளி என்னைக் கூட்டிக் கொள்ளும்படியாக நீ அநுகூலிக்க வேணும்' என்றபடி"[48] என்பர்.

திருமழிசையாழ்வார்,

'புன்புல வழிஅடைத்து, அரக்கு இலச்சினைசெய்து'

(திருச்.விருத்.76:1)

என்பதற்கு "கீழான விஷயங்களைப் பற்றியோடுகின்ற இந்திரியங்களின் ஓட்டத்தைத் தடுத்து அவ்விஷய வழியே புல் மூடிப்போம்படி அடைத்து அரக்கு முத்திரை இட்டு வாசனையும் கிளம்பாதபடி பண்ணி என்று பொருள்படும்"[49] என்று பொருள் கூறுவர். மேலும்,

'என்புஇல் எள்கி' (திருச்.விருத்.76:3)

என்பதற்கு, "என்பு - எலும்பு ; எலும்புகட்கு, இல் - இருப்பிடம், சரீரம்; அது என்குமோ (சிதிலமிகுமோ) எனில்

'கடல்நிறக் கடவுள் எந்தை

அரவணைத் துயிலுமா கண்டு

உடல் எனக்கு உருகு மாலோ'

என்றாரே தொண்டர் அடிப்பொடியாழவார் ; அது போலே கொள்ள வேண்டும்"[50] என்பர்.

தொண்டரடிப்பொடியாழ்வார்,

'மேம்பொருள் போக விட்டு, மெய்ம்மையை மிக உணர்ந்து'

(திருமா.38:1)

என்னும் பாசுரத்தில் இடம்பெறும் மேம்பொருளை மேலெழுந்த பொருள், மேவின பொருள், மேம்பாட்டை விளக்கும் பொருள் என்று மூன்று விதமாகப் பொருள் கொள்வதை, "கருமங்கள் காரணமாக வந்தேறியாய்ப் பகவத் உணர்ச்சி வந்தவாறே விட்டகலும்படியாக இருக்கும் பொருள் - மேலெழுந்த பொருள் எனப்படும். அதாவது, சம்சார சம்பந்தம். மேவின பொருளாவது, சிக்கென ஒட்டிக் கொண்டிருக்கும் பொருள் ; சேதநனால் பிரிக்கவொண்ணாதபடி இருக்கை ; அதாவது தேகசம்பந்தம், அவித்யை சம்பந்தம், மேம்பாட்டை விளைக்கையாவது, தன்னால் பற்றினாரை எல்லாம் அறிந்தவராக அபிமானித்திருக்கும்படி பண்ண முடிதல்"[51] என்றும்

'ஆம்பரிசு' (திருமா.38:2)

என்பதற்கு, "பிரகிருதி பிராக்கிருதங்கள் தாழ்வானவை, கீழானவை என்றறிந்து ஆன்மாவையும் உள்ளபடி அறிந்த பிறகு பின்னையும் ஆம்பரிசு அறிந்து கொள்ளுகையாவது கைங்கரியமே புருஷார்த்தம் - அடிமைத் தொழிலே ஆன்மா அடைய வேண்டிய பொருள் என்று அறிதலாகும்"[52] என்றும் பொருள் விளக்கம் தருவர்.

மேலும்,

'ஐம்புலன் அகத்த டக்கி' (திருமா.38:2)

என்பதற்கு, "எம்பெருமானுக்குப் புரியும் கைங்கரியத்தில் சொந்தப் பயன் பிறவாதபடி நோக்குதல்"[53] என்றும்

'காம்புறத் தலைசி ரைத்து' (திருமா.38:3)

என்பதற்கு, "இறைவனை அடையும் வழிகளில் தனக்குள்ள பற்று அறும்படி தன் தலையிலுண்டான துரிதங்களைப் போக்கி, அதாவது பேற்றுக்கு எம்பெருமான் சாதனமேயொழிய நான் செய்யும்

கிரியையால் லாபங்களொன்றும் சாதனமல்ல என்ற உறுதியான நம்பிக்கை கொண்டு என்றபடி"[54] என்றும்

'சோம்பர்' (திருமா.38:4)

என்பதற்கு "கெடுஞ்சோம்பரை விலக்குகின்றதைக் குறிப்பிடுகின்றது. கெடுஞ்சோம்பராவார் ஈசுவரன் இல்லை, சாத்திரம் இல்லை, பரலோகம் இல்லை என்றாற்போலே எல்லாவற்றையும் இல்லாது செய்து சாத்திரங்களில் விதிக்கப் பெற்ற கர்மங்களை அநுட்டியாமல் தமக்குத் தோன்றியவற்றைச் செய்பவர்கள். வாழுஞ் சோம்பராவார் - சாத்திரத்தில் நாத்திகராய் செய்யப்பட வேண்டியவற்றை விடாமல் ஆத்திக சிகாமணிகளாய் சித்தோபாயமான எம்பெருமானை மனத்தில் கொண்டு எம்பெருமானுடைய அநுபவமே காலட் சேபமாய் தமது இதத்தைத் தாமே தேடிக்கொள்ளுவதில் சோம்பியிருப்பவர்கள்"[55] என்றும் பொருள் விளக்கம் காண்பர்.

**பெயர் விளக்கம்**

பெயர்களுக்கு விளக்கம் கூற முற்படும் நிலையில் திருப்பாவை என்பதற்குச் "செல்வத்தையும் எம்பெருமான் முன் 'பதுமை' போன்று கிடக்கும் பாரதந்திரியப் பெட்பையும் குறிக்கின்றமையின் இந்நூல் 'திருப்பாவை' என்று பெயர் பெற்றதாகவும் கொள்ளலாம்"[56] என்பர்.

நாச்சியார் திருமொழி ஒவ்வொரு பாசுரத்திலும் திருமால் எழுந்தருளியிருக்கும் பாண்டீரவடம், பக்தவிலோசனம் ஆகிய இடப்பெயர்களின் விளக்கமாக, "பாண்டீரவடம் என்ற வடசொல் திரிந்து பாண்டிவனம் என்றாயிற்று. யமுனையாற்றின் அருகில் பெரிய ஆலமரம் ஒன்று உள்ள இடம். பலராமன் பிலம்பன் என்ற அசுரனைக் கொன்ற இடம்"[57] என்றும் பக்தவிலோசனம் ; பக்தம் - அன்னம், சோறு

*; விலோசனம் - பார்வை, சோறு பார்த்திருக்கும் இடம். யமுனைக் கரையில் இருடிகள் 'ஆங்கிரஸ' என்னும் வேள்வியை அநுட்டித்த இடம்"[58] என்றும் கூறுவர்.*

*பூதத்தாழ்வார், திருக்கடல் மல்லை எனப்பெறும் மாமல்லபுரத்தில் குருக்கத்தி மலரில் ஐப்பசித் திங்கள் அவிட்ட நட்சத்திரத்தில் பிறந்தார். இவ்வாழ்வாரின் பெயர்க்காரணமாக, "வடமொழியில் (பூ-சத்தாயாம்) என்ற தாது வடிவாகப் பிறந்தது பூதம் என்ற சொல். இது சத்தைப் பெற்றது என்று பொருள்படும். எம்பெருமானின் திருக்குணங்களை அநுபவித்தே சத்தைப் பெற்றார் என்னும் காரணம் பற்றியே பூதத்தாழ்வார் என்று திருநாமம் ஆயிற்று. 'கடல் வண்ணன் பூதங்கள்' என்ற விடத்து 'எம்பெருமானுடைய சிரம ஹரமான வடிவழகை அநுசந்தித்து அதனாலே சத்தையாம்படி இருக்குமவர்கள். இங்கு பூதம் என்ற சொல் அடியார்களைக் காட்டுகின்றது. (அவன் சத்தையே சத்தையாய் அறுகையாலே 'பூதம்' அடியார்களைக் காட்டுகின்றது)"[59] என்று குறிப்பிடுவர்.*

**பிறர் கருத்தை எடுத்துக்காட்டல்**

*பிறர் கருத்தை நிலைநாட்டும் தன்மையில் ந.சுப்புரெட்டியார் திகழ்கிறார்.*

*திருப்பாணாழ்வார், பெருமாளின் பேரழகில் அகப்பட்டுக்கொண்ட நிலையில் ஐயோ, என் நெஞ்சையும் இழுத்துக் கொண்டதென்பர், "'பச்சைச் சட்டை உடுத்துத் தனக்குள்ளதை அடையக் காட்டி எனக்குள்ளதை அடையக் கொண்டானே!' என்பர். "நான் எல்லாவற்றையும் நின்று நின்று அநுபவிக்க வேண்டும் என்றிருக்க அது பவபரிகரமான என் நெஞ்சைத் தன்பக்கலிலே இழுத்துக் கொள்வதே!*

ஐயோ! என்கின்றார்' என்பர் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்."[60] இவ்வனுபவத்தின் எதிரொலியாக,

"ஐயோ! இவன் வடிவென்பதோர்
அழியாஅழ குடையான்"

என்று கம்பன் வாக்கால் இராமபிரானின் அழகாக வடிவங் கொள்ளுகின்றது"[61] என்று இயம்புவர்.

இவ்வாறு ஐயோ என்பதற்கு பெரியவாச்சான் பிள்ளை, அழகிய மணவாளப் பெருமாள் நாயனார், கம்பர் ஆகியோரின் கருத்துகளை எடுத்துரைத்தமை புலப்படுகின்றது.

முதல் ஆழ்வார்கள் மூவரும் ஒருவரை ஒருவர் சந்தித்து அந்தாதிகள் அருளிச் செய்த திருகோவலூரை நினைந்து,

"பாவரும் தமிழால் பேர்பெறு பனுவல்
பாவலர் பாதிநாள் இரவில்
மூவரும் நெருக்கி மொழிவிளக்கு ஏற்றி
முகுந்தனைத் தொழுதநன் னாடு"[62]

என்று போற்றிப் புகழ்வர் வில்லிபுத்தூராரின் மகனார் வரந்தருவார். வேதாந்த தேசிகரும்,

"பாட்டுக்கு உரிய பழையவர்
மூவரைப் பண்டு ஒருகால்
மாட்டுக்கு அருள்தரும் மாயன்
மலிந்து வருத்துதலால்
நாட்டுக்கு இருள்செக நான்மறை
அந்தி நடைவிளங்க

வீட்டுக்கு இடைகழிக் கேவெளி

காட்டும்அம் மெய்விளக்கே"[63]

என்று போற்றுவதைக் கூறுவர். இதில் வரந்தருவார், வேதாந்த தேசிகர் ஆகியோரின் கருத்துகளை எடுத்துரைத்தமை புலப்படுகின்றது.

ஆண்டாள், குயிலை நோக்கிக் கண்ணன் தன்னை வந்து கூடும்படி கூவுவாயென்று அதன் காலில் வீழ்ந்து வேண்டுகிறாள். தலைவனைப் பிரிந்த நிலையில், 'காமம்மிக்க கழிபடர் கிளவியில்' அஃறிணைப் பொருள்களிடத்துப் பேசுதல் இயல்பு. "காமம்மிக்க கழிபடர் கிளவி என்பதற்கு காமமிக்க - (பிரிவினால்) காதல் விஞ்சுவதனால் ; கழி - மிக ; படர் - துன்புறுகின்ற; கிளவி - சொல்"[64] என்னும் பொருள் நயம்பட அமைந்துள்ளது. "தலை மகனைக் காணலுற்று வருந்தா நின்ற தலைமகள் தனது வேட்கை மிகுதியால் கேளாதனவற்றைக் கேட்பனவாக விளித்து கூறாநிற்றல் என்பர் பேராசிரியர்"[65] என்பர். இதில் பேராசிரியர் கருத்தினை எடுத்துக் கூறியிருப்பது புலப்படும்.

**வினாவிடைப் பாங்கு**

கற்பவர்க்குத் தெளிவு ஏற்படுத்தும் நோக்குடன் இடையிடையே வினாக்களைத் தொடுத்து, தக்க விடைகளையும் கூறுதல் இயல்பு. "மேடைப் பேச்சில் பேச்சாளன் முன்னிற்போரை விளித்தும், பல கேள்விகளை முன்வைத்தும், உணர்வு பொங்கப் பேசுகிறான். அப்போது கேட்போன் மனத்தில் நல்லதொரு மனமாற்றத்தை விளைவிக்க முடியும். இத்தகு வினா முறையைப் பண்டைய உரையாசிரியர்களும், உரைநடை ஆசிரியர்களும் பின்பற்றி உள்ளனர்."[66] இவ்வாறு ந.சுப்புரெட்டியாரும் வினா விடைப் பாங்கினைக் கடைப்பிடித்துள்ளார்.

ஆய்ச்சியர் தங்களின் ஆடைகளையும் அணிகளையும் களைந்து பொய்கைக் கரையில் வைத்துவிட்டு நீராடினர். அப்போது கண்ணன் அவர்களின் ஆடைகளையெல்லாம் கவர்ந்து மறைத்து விடுகின்றான். பிறகு அந்த ஆடைகளையெல்லாம் அவர்களுக்குக் கொடுத்து விடுகின்றான். ஆடைகளைப் பெற்ற ஆய்ச்சியர் புணர்ச்சிக்கு இணங்குகின்றனர். புணர்ச்சி நடைபெற்ற பின்பு பிரிவு ஏற்படுகின்றது. பின்பு மீண்டும் வாய்ப்பு எப்போது நிகழும் என்பதையறியக் கூடல் இழைக்கின்றனர், "கூடல் இழைத்தல் என்பது என்ன? வட்டமாகக் கோடு கீறி அதற்குள்ளே சுழி சுழியாகச் சுற்றும் சுழித்து இரண்டிரண்டு சுழியாகக் கூட்டிப் பார்க்கும்போது இரட்டைக் கணக்காக முடிவு பெற்றால் கூடுகை, ஒற்றைக் கணக்காக முடிவுபெற்றால் கூடாமை என்று உத்தியை நிலைநாட்டிக்கொண்டு ஏற்படுத்தும் ஒருமுறையே கூடலிழைத்தல் என்பது (இது கண்ணை மூடிக்கொண்டு செய்யப்படுவது). இது 'கூடல் வளைத்தல்' 'கூடற்குறி' என்ற திருநாமங்களாலும் வழங்கப்பெறும்"[67] என்பர். இதில் கூடல் இழைத்தல் பற்றியக் கருத்து விளக்கம் வினாவிடை அமைப்பில் அமைந்துள்ளது.

ஆண்டாள், திருமணப் பருவநிலையை எய்தியதையறிந்த பெரியாழ்வார் இவளுக்கேற்ற கொழுநனைக் காணப்பெறாது வருந்துகிறார். ஆண்டாளை அழைத்து, "நீ யாருக்கு வாழ்க்கைப்பட விரும்புகின்றாய்? என்று 'வினவ,

ஊனிடை யாழி சங்குத் தமர்க்கென்று
உன்னித்து; எழுந்தஎன் தடமுலைகள்
மானிடவர்க் கென்று பேச்சுப் படில்
வாழகில்லேன்"

என்று மறுமொழி பகர்ந்தாள். பட்டர்பிரான், 'பின்னை எங்ஙனம் நிகழ்வது?' என்று கேட்க, சூடிக் கொடுத்தாள், 'பெருமாளுக்கு உரியவளாவேன்' என்று மறுமொழி கூறினாள்"[68] என்பர். இதில் பெரியாழ்வார், ஆண்டாளிடம் வினவுவது வினாவிடை அமைப்பில் அமைந்துள்ளது.

ஆண்டாள் இயற்றிய திருப்பாவையில் அர்த்தப் பஞ்சகங்களின் தத்துவங்களை எடுத்துக் கூறுமிடத்து, "அர்த்தப் பஞ்சகம் என்பது என்ன? இதனை ஈண்டு விளக்குவேன் (1) ஆன்மாவின் இயல்பு, (2) ஈசுவரனது இயல்பு, (3) ஆன்மா அடையும் பயன், (4) அப்பயனை அடைவதற்கு உபாயம், (5) அப்பயனை அடைவதற்குப் பகையாய் உள்ளவைகள் என்ற ஐந்து பொருள்களை விளக்கமாக அறிதல் 'அர்த்த பஞ்சக ஞானம்' என்று சொல்லப்படும்"[69] என்று வினாவிடை அமைப்பில் மொழிவர்.

ஆண்டாள், கண்ணன் தன்னிடத்துக் கலவி செய்யாத நிலையில் அவனின் பிரிவைத் தாங்கமாட்டாதிருக்கிறாள். அப்போது பிரிந்திருப்பவர்களைக் கூட்டவல்ல காமனை நோக்கி, "மறந்தும் புறத்தொழா வேண்டியிருக்க, தேவதாந்தரத்தின் காலில் விழுவது பொருந்துமோ? என்ற வினா எழுகின்றது. 'வழியில்லா வழியே முயற்சி செய்தாகிலும் கண்ணபிரானோடு கலக்கப் பெற வேண்டும்' என்ற முயற்சிகள் யாவும் உபேயத்தில் அடங்கி விடுதலால் அது குற்றமில்லை என்று பெரியோர் பணிப்பர்"[70] என்று இரந்து வேண்டுதலை வினா-விடைப் பாங்கில் இடம்பெறச் செய்வர்.

ஆண்டாள், காதல் முற்றிய நிலையில் கூறும்

'உள்ளே உருகி நைவேனை' (நாச்.திரு.131)

என்ற பாடலில் இடம்பெறும் 'கொங்கை தன்னைக் கிழங்கோடு அள்ளிப் பறித்திட்டு எறிந்து என் அழலைத் தீர்வேன்' 'அவன் மார்பில் எறிந்து' என்பதை விளக்குமிடத்து, "'கொங்கை தன்னைக் கிழங்கோடும் அள்ளிப் பறித்திட்டு எறிந்து என் அழலைத் தீர்வேனே' என்றால் போதாதோ? 'அவன் மார்பில் எறிந்து' என்பது எதற்காக? இம்முலைகளால் தான் படும் பாட்டை பெண்ணின் வருத்தமறியாத பெருமானான அவனும் படவேண்டும் என்ற கருத்தினால் என்பதை உணர்த்துவதற்காக ; இம்முலைகள் அவன் மார்பில் ஏறி அவனைக் கும்மிக் குமைக்கவேண்டும் என்று நினைக்கின்றாள். இக்கஷ்டத்தை அவனும் பட்டானாகில் அதுவே இவளுடைய அழல் தீர்த்தபடி போலே ஆகும் என்பது கருத்து"[71] என்று கூறுவர்.

ஞானம் என்பது உலகில் பலவிதம். அளவை நூல் படித்து வாதங்கள் செய்யத் தேர்ச்சி பெற்றவனும் தன்னை ஞானி என்கிறான். ஆயுர்வேதம், மந்திரம், தந்திரம் ஆகியவற்றில் கைதேர்ந்தவனும் தன்னை ஞானி என்கிறான். இவ்வாறு ஒவ்வொருவரும் தன்னை ஞானி என்று நினைத்துக்கொண்டால், "உண்மையான ஞானம் எது? உண்மையில் ஞானி என்பவன் எவன்? என்கின்ற வினாக்களுக்கு சாத்திரங்கள் கூறும் விடை - எம்பெருமானை அறிகின்ற அறிவு ஒன்றுதான் ஞானம் எனப்படும்"[72] என்று விடை கூறலை வினாவிடை அமைப்பில் அமைப்பர்.

பொய்கையாழ்வார் இறைவனை நோக்கி, "'யுகக்கணக்காக ஆராய்ச்சி செய்துகொண்டே போனாலும் இறைவனுடைய

பெருமையையும் அறிய முடியாது ; எளிமையையும் உள்ளபடி அறிய முடியாது. ‘உணர்வார் ஆர்?’ என்ற வினாவினால் எல்லாம் அறியவல்ல இறைவனாலும் தன்னை அறிய முடியாது என்று சூசகமாகத் தெரிவிக்கப்படுகின்றது”[73] என்பர். இதில் இறைவனை உணரக்கூடிய கருத்து விளக்கமானது வினாவிடைப் பாங்கில் அமைந்துள்ளது.

பேயாழ்வார், இறைவனைக் காண்பதற்கு இருளாத சிந்தை வேண்டும் என்கிறார். இருளாத சிந்தை என்பதை விளக்குமிடத்து, “இருளாத சிந்தை என்பது என்ன? இராஜச, தாமத குணங்கள் கலசாமல் சுத்த சத்துவ குணம் மட்டும் நிறைந்திருக்கும் சிந்தையே இது”[74] என்று வினாவிடைப் பாங்கில் கூறுவர்.

பேயாழ்வார், பெருமானைக் காண்பதற்கு ஞானம் வேண்டும் என்றும், ஞானம் சிறப்புற்று இருத்தற்கு உள்ளம் கலங்கமற்றிருத்தல் வேண்டும் என்பர். இதற்கான வழியினை எடுத்துரைக்குமிடத்து, “ஞானம் பிரகாசிப்பதற்கு உள்ளம் களங்கமற்றிருத்தல் வேண்டும். இதற்கு வழி என்ன? நான்மறைகளை நன்கு ஓதி உணர்ந்து, அவற்றின் பொருள்களையும் நன்குணர்ந்து, இந்திரியங்களைப் பட்டிமேய வொட்டாதபடி தடுத்து அவனைக் காணப் புகல்வேண்டும்”[75] என்று வினா விடைப் பாங்கில் எடுத்துரைப்பர்.

தொண்டரடிப்பொடியாழ்வார், திருவரங்கச் சோலையின் நடுவில் அமைந்த திருக்கோயிலின் அரங்க மண்டபத்தில் எப்படித் துயில்கின்றார் என்பதை வினா விடை அமைப்பில் கூறுவர். இதனை, “திருக்கோயிலின் அரங்கமண்டபத்தில் ‘பச்சை மாமலை போல் மேனியையும் பவள வாயையும் செங்கண்ணையும் உடைய அச்சுதன்’

*அறிதுயில் கொண்டிருக்கின்றான். எப்படித் துயில்கின்றான்? ஆழ்வார் கூறுவார்;*

*குடதிசை முடியை வைத்துக்*
*குணதிசை பாதம் நீட்டி*
*வடதிசை பின்பு காட்டித்*
*தென்திசை இலங்கை நோக்கிக்*
*கடல்நிறக் கடவுள் எந்தை*
*அரவணைத் துயிலுமா கண்டு*
*உடல் எனக்கு உருகு மாலோ!*

*என்று உள்ளம் உருகிப் பாடுகின்றார்”[76] என்பதால் அறியமுடிகிறது.*

**பன்னூற் புலமை**

*இலக்கியப் படைப்பாசிரியருக்குப் பன்னூற் புலமை இன்றியமையாதவை. “ஒரு மூல நூலின் கருத்தினை விளக்க வரும் உரையாசிரியர் அம்மொழியில் அமைந்துள்ள பிற நூற்சான்றுகளைக் காட்டி விளக்க முனைவர்.”[77] “அவர்கள் உரை கூறும்போது தமிழ் நூல்களிலிருந்து மேற்கோள் காட்டித் தம்முடைய உரைக்கு மேலும் வலுவூட்டுவர்.”[78] இப்பண்பு ந.சுப்புரெட்டியாரிடத்தும் காணக் கிடக்கிறது.*

*பெரியாழ்வார், ஸ்ரீவில்லிபுத்தூரில் திருத்துழாய் பாத்தி அமைத்தற்காகக் களைக்கொட்டு கொண்டு நந்தவனத்தைத் தோண்டுகிறார். அப்போது பெண்மகவு கிடைக்கிறது. சீதையின் பிறப்பினை, சனகன் யாகபூமியை ஏற்படுத்துவதற்காக நிலத்தை உழும்போது கொழுமுனையில் அகப்பட்டதாகக் கேள்விப்பட்டதைக் கம்பநாடன்,*

"உழுகின்ற கொழுமுகத்தின்

உதிக்கின்ற கதிரின் ஒளி

பொழிகின்ற புவிமடந்தை

உருவெளிப்பட் டெனப்புணரி

எழுகின்ற தெள்ளமுதோடு

எழுந்தவளும் இழிந்தொதுங்கித்

தொழுகின்ற நன்னிலத்துப்

பெண்ணரசி தோன்றினாள்"[79]

என்று கம்பராமாயணத்தில் இடம்பெறும் செய்தியைக் கூறுவர்.

திருமங்கையாழ்வார்,

"வரைசெய் மாக்களி றிளவெதிர் வளர்முளை..."

(பெரிய.திருவந்.15)

என்னும் பாடலில் இடம்பெறும் ஆண் யானை, தன் பெண் யானைக்குத் தேன் தோய்ந்த மூங்கில் குருத்தைக் கொடுத்து மகிழ்விப்பதைக் கம்பர், சித்திரகூட மலையில் இக்காட்சியினைச் சீதைக்கு, ராமன் வாயிலாக,

"உருகு காதலில் தழைகொண்டு

மழலைவண் டோச்சி

முருகு நாறுசெந் தேனினை

முழைநின்றும் வாங்கி,

பெருகு சூல்இளம் பிடிக்குஒரு

பிறைமருப் பியானை,

பருக வாயினில் கையில்நின்று

அளிப்பன பாராய்"[80]

என்று உணர்த்துவதைக் குறிப்பிடுவர்.

பூதத்தாழ்வாரின்,

"போதறிந்து வானரங்கள் பூஞ்சுனைபுக்கு, ஆங்கலர்ந்த..."

(இரண்.திருவந்.77)

என்னும் பாடலில் அதிகாலையில் முனிவர்கள் துயில் எழுவதைப் போன்று குரங்குகளும் சுனைகளில் நீராடி அங்குள்ள மலர்களைக் கொய்து இறைவனிடத்துத் துதி செய்து பணிந்து நிற்கும். இக்கருத்தினைக் கம்பரும் சித்திரகூடக் குரங்குகளின் செயல்களாக,

"'இடுகு கண்ணினர் இடருறு
மூப்பினர் ஏக
நெடுகு கூனல்வால் நீட்டின
உருகுறு நெஞ்சக்
கடுவன் மாதவர்க்கு அருநெறி
காட்டுப காணாய்'

என்பது கம்பன் படைத்த சொல்லோவியம். இங்கு இராமன் சீதைக்குப் பல சித்திரகூட மலைக் காட்சிகளைக் காட்டுகின்றான். இன்னும் சில மந்திகள் சிலம்பின் நூல், பஞ்சின் நூல் இவற்றை ஆராய்ந்து தெரிந்து அந்தணர்க்கு அளிக்கின்றன"[81] என்பதை எடுத்துக் காட்டுவர்.

மூன்று ஆழ்வார்களின் பக்தி நிலைகளை எடுத்துரைக்கும் போது, "முதிர்ந்த பக்தி நிலையை 'ஞானம் கனிந்த நலம்' என்று குறிப்பிடுவர் திருவரங்கத் தமுதனார்"[82] என்பர்.

லோகசாரங்க மாமுனிவர், திருப்பாணாழ்வாரிடத்துச் சினம் கொண்ட நிலையில் சினம் பலிக்குமிடத்தில் காத்துக் கொள்பவனே சினம் காப்பவன். இது அருளுடையவன் செயல் என்று குறிப்பிட்டு,

"செல்லிடத்துக் காப்பான்

சினம்காப்பான் ; அல்லிடத்துக்

காக்கின் என்? காவாக்கால்

என்?

என்பது பொய்யாமொழி"[83] என்று திருக்குறளை எடுத்துக்காட்டுவர்.

உண்மையில் இறைவனையாவது அல்லது அவன் உருவத்தையாவது அறிந்து கொள்வது அருமை. இவற்றை அறிய முயலும் போது அறிவு அறியாமையாகிவிடுகின்றது என்பதை,

"'அறிதோறும் அறியாமை கண்டற்றால்'

என்று இன்பத்திற்குக் கூறும் கூற்று இறைவனை அறிவதற்கும் பொருந்தும்"[84] என்று குறள் கருத்தினை எடுத்துரைப்பர்.

தொண்டரடிப்பொடியாழ்வார், தேவதேவியின் வலையில் சிக்கிக் கொண்டு சிலகாலம் இன்பமுடன் வாழ்கின்றார். அந்தணரிடம் இருந்த செல்வம் முழுவதும் அழிந்துவிடுகிறது. தேவதேவியும் பொருளில்லாத அந்தணரைப் பொருள் செய்யாது கைவிட்டுத் தன் இல்லத்திற்குப் போய்விடுகிறாள்.

'அன்பின் விழையார் பொருள்விழையும் ஆய்தொடியார்

இன்சொல் இழுக்குத் தரும்'

என்பதை அந்தணர் உணராதது விசனிக்கத்தக்கது"[85] என்று குறளை எடுத்துரைப்பர்.

தொண்டரடிப்பொடியாழ்வாரால் தேவதேவியின் பிரிவை ஆற்றியிருக்க முடியவில்லை. அவள் வீட்டைச் சுற்றி வட்டமிடுகின்றார். தின்னையில் தயங்கி நிற்கின்றார். பேரின்பத்தை நாடி நிற்கும் அந்தணரின்

*மனம் சிற்றின்பத்தை நாடிநிற்கும் நிலையைக் கண்டு யார்தான் நகைக்காமல் இருக்கமுடியும். பொதுமக்களின் ஏளனத்திற்கு உரியவராகின்றார்.*

*"'தலையின் இழிந்த மயிரனையர் மாந்தர்*

*நிலையின் இழிந்தக் கடை'*

*என்ற வள்ளுவர் வாய்மொழியும் நம் நினைவிற்கு வருகின்றது"[86] என்று குறளை எடுத்துக்காட்டுவர்.*

*திருமழிசையாழ்வார், தான் கூறும் சொற்களுக்குப் பொருளாய் இருந்து கொண்டு நெஞ்சமாகிய நிலத்தில் தமிழாகிய விதையை விதைத்துப் பக்தியாகிய பயிரை வளரச் செய்த எம்பெருமானைப் 'பக்தியுழவன்' என்று திருநாமம் இட்டு மகிழ்கின்றார். இதனை,*

*'வித்து மிடல்வேண்டும் கொல்லோ, விடையடர்த்த'*

*(நான்.திருவந்.23:1)*

*என்னும் பாசுரத்தில் காண இயலும். "இப்பாசுரம்,*

*'வித்தும் இடல்வேண்டும்*

*கொல்லோ விருந்தோம்பி*

*மிச்சில் மிசைவான் புலம்'*

*என்ற குறளை நினைக்கச் செய்கின்றது"[87] என்பர்.*

*குலசேகரப்பெருமாள், "நல்லதோர் பெண்மணியை வாழ்க்கைத் துணைவியாக்கிக் கொண்டு அவள் மூலம் நீளாதேவியின் அம்சமான இளை என்ற ஒரு மகளையும் திடவிரதன் என்று தன் தந்தையார் பெயரையே பெறும் ஒரு மகனையும் பெற்று,*

*'மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்*

*நன்கலம் நன்மக்கட் பேறு'*

*என்ற வள்ளுவர் வாக்கிற்கு எடுத்துக்காட்டாயினான். கவலையற்ற வாழ்க்கையையும் நடத்தினான்”*[88] *என்பர்.*

*யசோதைப் பிராட்டி எவ்வித நோன்பும் நோற்காமல் எதிர்பாராமல் தெய்வ நங்கை என்று சிறப்பிக்கப் பெறுகிறாள். “இந்நிலையில்,*

*‘குழல்இனிது யாழ்இனிது என்பர்தம் மக்கள்*

*மழலைச்சொல் கேளா தவர்’*

*என்ற வள்ளுவர் பெருமானின் வாய்மொழியையும் நினைந்து பார்க்கத் தோன்றுகின்றது”*[89] *என்றுரைப்பர்.*

*யசோதைப் பிராட்டி கண்ணனின் இளம்பருவத்தை அனுபவிக்கப் பெறாத நிலையில் என்தாய் என்னை வீணாகப் பெற்றாளென்று புலம்புமிடத்து,*

*“‘மக்கள் மெய்தீண்டல் உடற்கின்பம்’*

*என்ற குறட்பா பகுதியையும்,*

*‘அமிழ்தினும் ஆற்றல் இனிதே தம்மக்கள்*

*சிறுகை அளாவிய கூழ்’*

*என்ற வள்ளுவர் பெருமானின் வாக்கையும் சிந்தித்து மகிழ்கின்றோம்”*[90] *என்பர்.*

*குலசேகரப்பெருமாள், மன்னன் குடிமக்களிடத்து அருள் செய்யாது அவர்களுக்குத் துன்பம் விளைவித்த நிலையில் குடிமக்கள் மன்னனின் செங்கோலை எதிர்பார்த்து நிற்பர். இந்தக் குடிகளின் நிலையில் ஆழ்வார்,*

"தான் நோக்கா தெத்துயரஞ் செய்திடினும் தார்வேந்தன்
கோல்நோக்கி வாழுங் குடிபோன் றிருந்தேனே"

(பெரு.திரு.3:3-4)

என்னும் பாசுரத்தில்,

"'வானோக்கி வாழும் உலகெல்லாம் மன்னவன்
கோல்நோக்கி வாழும் குடி'

என்ற குறள்மணியின் ஒளி இப்பாசுரத்தில் வீசுவதைக் கண்டு மகிழ்கின்றோம்"[91] என்றுரைப்பர்.

தமிழ்ப் புலவர்கள் பொய்கையாழ்வார் பாடல்களைப் பொய்கையார் வாக்கு என்று பாராட்டுவர். வைணவப் பெருமக்கள்,

"................... எம் பொய்கைப்பிரான் மறையின்
குருத்தின் பொருளையும் செந்தமிழ் தன்னையும்
கூட்டி, ஒன்றத்
திரித்து, அன்று, எரித்த திருவிளக்கு'

என்று போற்றுவர்"[92] என்பர்.

கூனியின் முதுகில் உண்டை கொண்டடித்த நிகழ்ச்சியினைத் திருமழிசையாழ்வார்,

'கூன்அகம் புகத்தெளித்த கொற்றவில்லி அல்லையே?'

(திருச்.விருத்.30:4)

'கொண்டை கொண்ட கோதை மீது, தேன் உலாவு கூனிகூன்'

(திருச்.விருத்.49:1)

என்ற பாசுரங்களில் குறிப்பிடுவர். "இதையே கம்பநாடன் தனது காவியத்தில் இடம் தருகின்றான். இராமனுக்கு முடிசூட்ட நினைக்கின்றான். அதைத் தடுக்க நினைத்துச் சூழ்ச்சியில் இறங்குகின்றாள் மந்தரை. பழைய

நிகழ்ச்சியை நினைத்து கடுஞ்சினம் கொள்ளுகின்றாள். இதனை,

‘தொண்டைவாய்க் கேகயன் தோகை கோயின்மேல்

மண்டினாள் வெகுளியின் மடித்த வாயினாள்

பண்டைநாள் இராகவன் பாணி வில்லுமிழ்

உண்டையுண் டதனைத்தன் உள்ளத்து உள்ளுவாள்’

என்று காட்டுவான்”[93] என்பதையும், “சுக்கிரீவனுக்கு அரசியல் நீதிகளை எடுத்துரைக்கின்றான் இராமன். அரசியலில் சிறியர் என்று ஒருவரை இகழ்ந்து தீயன செய்தலால் தீமை விளையும் என்ற உண்மையை தன் ஒழுக்கத்தையே எடுத்துக்காட்டாகத் தருகின்றான்.

“சிறியரென் றிகழ்ந்து நோவு

செய்வன செய்யன் மற்றிந்

நெறியிகந் தியானோர் தீமை

யிழைத்தலால் உணர்ச்சி நீண்டு

குறியதா மேனி யாய

கூனியாற் குவவுத் தோளாய்

வெறியன வெய்தி நொய்தின்

வெந்துயர்க் கடலின் வீழ்ந்தேன்’

என்ற பாடலில் இந்நிகழ்ச்சி சுட்டப் பெறுவதைக் காணலாம்”[94] என்பதையும் எடுத்துரைப்பர்.

குலசேகரப்பெருமாள் இராமாயணத்தின் மீது ஈடுபாடு கொண்டு தம்மை மறந்த நிலையில் திகழக்கூடியவர். தம்மை மறந்து நிகழ்ச்சி நடைபெறுவதாகக் கருதுவதை ஒட்ட உணர்தல் (Empathy) என்பர் திறனாய்வாளர். இது உளவியல் அடிப்படையில் அமைந்தது. இது தன்னைப் பிறராகக் கருதி உணர்வது, “ஒரு சிறு குழந்தை நடுத் தெருவில்

உட்கார்ந்துகொண்டு விளையாடுகின்றது. மகிழுந்து (Car) ஒன்று அக்குழந்தையை நோக்கி வந்துகொண்டுள்ளது. வண்டி தன்மீது ஏறிவிடும் என்ற அச்ச உணர்ச்சியே குழந்தைக்கு இல்லை. ஆனால் அதைக் கண்ணுறும் நாம் அக்குழந்தை நிலையில் இருந்து கொண்டு அச்சவுணர்ச்சியைப் பெறுகின்றோம். நாம் குழந்தையாகவே ஆய்விடுகின்றோம் ; ஓடிக் குழந்தையைத் தூக்கி விபத்தினின்றும் காக்கவும் முற்படுகின்றோம் ; இந்த உணர்ச்சியே 'ஒட்ட உணர்தல்' என்பது"[95] என்று தம்மை மறந்த நிலையில் நிகழும் நிகழ்ச்சியை உளவியல் செய்தியோடு எடுத்துரைப்பர்.

குலசேகரப்பெருமாள், பாகவதத்தில் ஈடுபாடு கொண்டவர். "பாகவதர்களுடைய பெருமையை ஸ்ரீவசன பூஷணம்,

'வேதகப் பொன் போலே இவர்க
ளோட்டை சம்பந்தம்'

என்று கூறும்"[96] என்பர்.

குலசேகரப்பெருமாளின் திருவேங்கட மாமலையின் திருமொழியை அடியொற்றி முத்தகக்கவி வீரராகவ முதலியார் திருவேங்கடக் கலம்பகத்தில் போற்றி மகிழ்வதை,

"மாடாக நிழற்றுசெழு
மரனாகத் தவச்சிறிய
பூடாகக் குழைத்தநறும்
புதலாக வழிபடுமோர்
ஓடாகப் பெறுவமெனில்
உயிர்காள் நாற்கதிபெறலாம்

*வீடாகத் திருநெடுமால்*

*வீற்றிருக்கும் வேங்கடத்தே"*[97]

*என்பர்.*

*'காட்டில் வேங்கடம் கண்ண புரநகர்...' (நாச்.திரு.32)*

*எனத் தொடங்கும் பாசுரத்தில் இடம்பெறும் காட்டில் வேங்கடம், கண்ணபுரநகர் இரு தொடர்களையும் விளக்குமிடத்து, "காட்டில் வேங்கடம் ; தண்டகாரண்ய வனத்தில் இருடிகளோடு கூடியிருந்து வனவாச ரஸம் அநுபவித்தபடிக்கு ஒப்பாகும் திருமலை வாசம் என்பதைக் காட்டுகின்றது இத்தொடர். கண்ணபுரநகர் ; வனவாசம் முடிந்து திருவயோத்தியில் அனைவரோடும் கூடியிருந்து நகரவாச ரஸம் அநுபவித்தபடிக்கு ஒப்பாகும் - திருக்கண்ணபுரவாசம் என்பதைக் காட்டுகின்றது இத்தொடர்"*[98] *என்று கம்பராமாயணத்தை எடுத்துக்காட்டுவர்.*

**ஒப்புமை காட்டல்**

*ந.சுப்புரெட்டியார், ஆழ்வார்களின் ஆராஅமுதில் இடம்பெறும் ஆழ்வார்களின் பாடற் கருத்துகளைத் திருவாசகம், குறுந்தொகைப் பாடல், வனத்துறை, தெய்வத் திருமேனி அமைத்தல் ஆகியவற்றோடு ஒப்புமை காட்டியுள்ளார்.*

*குலசேகரப்பெருமாள், திருவித்துவக்கோட்டுப் பெருமானைத் தாயாகப் பாவித்துக் குழந்தை நிலைக்கு வந்து விடுகின்றார். சினத்தால் தாய், தன் குழந்தையை வெறுத்தாலும் தாயின் கருணையைக் கருதி குழந்தை அவள் கருணைக்குப் பாத்திரமாவதை,*

*'அரிசினத்தா லீன்றதாய் அகற்றிடினும் மற்றவள்தன்'*

*(பெரு.திரு.1:3)*

என்ற பாடலில் குறிப்பிடுவர். இக்கருத்திற்கு, "'அழுதால் உன்னைப் பெறலாமே' என்றபடி அழுது அடியடைந்த மணிவாசகப் பெருமானைப் போலவே, கண்களில் நீர் மல்க அழவேண்டும். இந்நிலையில் பரமான்மாவுக்கும் சீவான்மாவுக்கும் உள்ள உறவுமுறை தாய்க்கும் சேய்க்கும் உள்ள உறவுமுறை போன்றது என்பதை அறிகின்றோம்"[99] என்று திருவாசகத்தை எடுத்துக் காட்டுவர். மேலும்

"'...................................

ஊதை துற்றும் உறவுநீர்ச் சேர்ப்ப

தாய்உடன்று அலைக்கும் காலையும் வாய்விட்டு

'அன்னாய்!' என்னும் குழவிபோல

இன்னா செயினும் இனிதுதலை அளிப்பினும்

நின்வரைப் பினள்என் தோழி

தன்னுறு விழுமம் களைஞரோ இலளே'

'அன்னை அலைப்பினும், அணைப்பார் பிறரின்றி அவள்மாட்டே செல்லும் குழவி போல, நீ அருளின்றிப் பிரியினும் நின்மாட்டே நின்று நின் தண்ணளியால் வாழும் நிலையினள்' என்று தோழி கூறும் கருத்தினையே ஆழ்வாரும் தன்னைக் குழந்தை நிலையிலும் இறைவனைத் தாய் நிலையிலும் வைத்துப் பேசுகின்றார்"[100] என்று குறுந்தொகையை ஒப்புமைப்படுத்துவர்.

குலசேகரப்பெருமாள், திருவேங்கட மலையில் தன் பிறவிப் பயனை அனுபவிக்க வேண்டுமென்று நினைத்துத் தம்பகமாய்ப் பிறக்கவேண்டுமென்று விரும்பிய நிலையில் வேறொரு உண்மை அவர் மனதிற்குத் தென்படுகிறது. "அரசு வனத்துறை அலுவலர் மலையிலுள்ள செடி செட்டுகளை அடிக்கடி சோதிப்பவராதலால், அவர்கள்

தம்பகத்தைக் களைந்தெறிந்திடக் கூடுமெனவும், அது தானே விரைவில் தீர்ந்தொழியக் கூடும் எனவும் நினைத்த ஆழ்வார், அவ்வாறு ஆகாமல் என்றும் ஒரு படியாயிருக்கும் படி அத்திருமலையில் ஒரு பாகமாகக் கடவேன் என்று விரும்புகின்றார்"[101] என்பர். இதில் வனத்துறை அலுவலர் பணிகளை அறிந்தவர் என்பது பெறப்படுகிறது.

திருவேங்கடமலையில் பொற்குவடாகப் பிறக்க வேண்டுமென்று எண்ணிய குலசேகர ஆழ்வார், "இதில் ஓர் இடையூறு இருக்கும் என்று அவர் மனத்திற்குப் படுகின்றது. புதிதாகத் திருக்கோயிலை எழுப்புபவர்கள் சிலைவடிவான மூலத்திருமேனி எழுந்தருளப் பண்ணுவதற்காக மலை முகடுகளினின்று பெரும் பெரும் பாறைகளை உடைத்துக் கொண்டு போகின்ற வழக்கம் உள்ளதாதலால் அதுவும் ஏற்றதல்லவென்று தோன்றுகின்றது. தோன்றவே, அங்ஙனம் பெயர்த்துக் கொண்டு போகக் கூடாததான கானாறாகப் பிறக்கவேண்டும் என்று கருதுகின்றார்"[102] என்றுரைப்பர். இதில் பெரும் பாறைகளை உடைத்துத் தெய்வ மூலத் திருமேனி அமைப்பதை அறிந்தவர் என்பது உணரமுடிகிறது.

குலசேகரப்பெருமானின் திருவித்துவக்கோடு பற்றிக் குறிப்பிடும் போது "மலைநாட்டில் இது திருமிற்றக்கோடு என வழங்கி வருகின்றது. ஷோரனூர் இருப்பூர்தி நிலையத்திலிருந்து 10 கல் தொலைவு, பேருந்து வழி"[103] என்பதால் இடப்பெயர்களையும் அறிந்தவர் என்பது புலனாகிறது.

**இலக்கணப் புலமை**

இலக்கியப் படைப்பாளர்கள் "தாம் கருதியவற்றையெல்லாம் நன்கு அழகுபட எடுத்துச் சொல்லும் ஆற்றல் பெற்றவராதல் வேண்டும்; அவ்வாறு, சொல்லுக்கும் தொடருக்கும் - பொதுவாகப் பாடலுக்கு -

உரைதரும் போது சொற்களின் இலக்கண வரையறை இன்றியமையாத இடத்தைப் பெறுகிறது."[104] அவ்வகையில் ந.சுப்புரெட்டியார், இலக்கணப் புலமை மிக்கவராகத் திகழ்கிறார்.

ஆண்டாள், கண்ணனைக் கூடப்பெறாத நிலையில் 'காமம் மிக்க கழிபடர் கிளவியால்' மறுமொழி கூறப்பெறாத புள் முதலியவற்றை நோக்கிக் கூறுகிறாள். இதற்கு,

"'ஞாயிறு திங்கள் அறிவே நாணே
கடலே கானல் விலங்கே மானே
புலம்புறு பொழுதே புள்ளே நெஞ்சே
அவையல பிறவும் நுதலிய நெறியால்
சொல்லுந போலவும் கேட்குந போலவும்
சொல்லியாங் கமையும் என்மனார் புலவர்'

என்ற தொல்காப்பிய நூற்பாவை, இதற்குரிய விதியாகக் கொள்ளலாம்"[105] என்பர். மேலும், "ஒரு பயன் சிந்தித்துச் சொல்லுமோ எனின், சொல்லாள்; குழவி அழுதாற்போல் வேட்கை மிகுதியாற் சொன்னவிடத்து அப்பயன் நிகழும், குழவி அழுகின்றது, 'எனக்குப் பால் தம்மின் ; நீர் ஆட்டுமின்' என்றழாது, தூக்கம் வந்ததாக அழும் ; அழ, அறிவார் பயன் எய்துவிப்பர் என்பது என்ற இறையனார் களவியலின் உரையாலும் இஃது அறியப்படும்"[106] என்றுரைப்பர்.

இவ்வாறு தொல்காப்பியம், இறையனார் களவியல் ஆகியவற்றை எடுத்துக்காட்டியிருப்பதால் இவருடைய இலக்கணப் புலமை புலப்படும்.

**தொகுப்புரை**

பெரியாழ்வார், ஸ்ரீவில்லிபுத்தூரில் நந்தவனத்தில் கண்டெடுக்கப் பட்ட குழந்தை ஆண்டாளுக்குத் தக்க வயது எய்தியதும் பஞ்ச சம்ஸ்காரங்களைச் செய்து வைத்தார். தாபம், புண்ட்ரம், நாமம், மந்திரம், யாகம் ஆகியன பஞ்ச சம்ஸ்காரங்கள்; புருஷகார பூதை, புருஷகாரம், க்ஷேத்துவம், பாரதந்திரியம், ஆன்மா அடையும் பயனிற்குத் தடைகல்லாக இருக்கக்கூடிய ஆன்ம விரோதி, பரத்துவ விரோதி, புருஷார்த்த விரோதி, உபாய விரோதி, பிராப்ய விரோதி ஆகிய வடமொழிச் சொற்களுக்குத் தமிழில் பொருள் விளக்கம் கூறியுள்ளார்.

காப்புநாண் (கங்கணம்), பொரிகளை அள்ளித் தெளித்தல் (லாஜஹோமம்), பழவினைகளை (சஞ்சித கர்மங்களை), வார்த்தையை (சரமசுலோகத்தை), குற்றமற்றவனாக்கி (நிஷ்கல் மஷனாக்கி), வாயிலுக்கும் வீட்டிற்கும் இடைப்பட்ட ஒடுக்கமான இடம் (தேஹளி), பாம்பணைப் பள்ளியானை (க்ஷேசாயியை), இதம் (ஹிதம்), எதிர்பாராமல் (யாத்ருச்சிகமாகவே), மிச்சலை (க்ஷேத்தை), முலை (அதர்), மயக்கம் (வியாமோகம்), சீவான்மா பரமான்மாவின் உடைமை (ஸ்வஸ்வாமி சம்பந்தம்) என்று தமிழ்ச் சொற்களை வடமொழியில் கூறியுள்ளார். வடமொழிச் சொற்களைத் தமிழ்ப்படுத்தியும், தமிழ்ச் சொற்களை வடமொழிப் படுத்தியும் கூறியிருப்பதால் இவரின் வடமொழிப்புலமை புலனாகும்.

பெரியாழ்வார், ஸ்ரீவில்லிபுத்தூரில் நந்தவனத்தில் கண்டெடுக்கப் பட்ட பெண் மகவாகிய ஆண்டாளை, கோயிலில் இருந்து கொண்டுவரும் பிரசாதத்திற்கும், கோதை, கொள்கொம்பாகிய

கண்ணனை அடைய நினைப்பதை மரத்தைச் சுற்றிப் படரும் பூங்கொடிக்கும், பெருமானின் பேரழகைக் கண்ட ஆண்டாளின் உள்ளத்திற்கு இரும்பை ஈர்க்கும் காந்தத்திற்கும், திருமாலைத் தன் நாயகனாகக் கொண்ட ஆண்டாளின் காதல் பெருக்கினை பள்ளமடை நீருக்கும், ஆண்டாளின் ஆற்றாமைக்குச் சிறுவர்களின் பிடிவாத குணமும், பெருமாள், ஆண்டாளை அணைந்து ஆற்றலைக் கொள்ளை கொள்ளுதல் உலங்கு என்ற கொசு விளாம்பழத்தில் மொய்த்து சாறு வற்றுவதற்கும் ஆண்டாள் இராமநாமங்களைச் சொல்லிச் செயலற்றிருப்பதற்கு மழைக்காலத்தில் எருக்கம் பழுப்புகள் அற்று விழுவதற்கும், திருப்பாணாழ்வாரின் உள்ளத்திற்கு வெண்ணெய்யும் திருப்பாணாழ்வார் தொண்டர் வேடம் பூண்டதற்குப் புலியைப் பார்த்துப் பூனை சூடு போட்டுக் கொள்ளலும் சோலையிலுள்ள மலர்கள் வீழ்தலுக்குத் தேவர்கள் பூமாரி பொழிதலும் திருப்பாணாழ்வார், கோவிந்தனை யாழிசையால் மகிழ்வித்தலுக்குக் கோபாலன் கோக்களை குழல் இசையால் மகிழ்வித்தலுக்கும் பெருமாளின் மேனி அழகிற்குப் பச்சை மாமலையும் பெருமாளை மலரிட்டுப் பணிதலுக்கு, அரசர்களை மலரிட்டுப் பணிதலுக்கும் திருமழிசையாழ்வார் பெருமாள் மீது கொண்ட நம்பிக்கை தழைப்பதற்குப் பட்டமரம் தழைப்பதும், பெருமாளின் திருபவளத்தில் இருக்கும் வெண்ணெய் சுவடினை யசோதைப் பிராட்டி அழகருக்குக் கொடுத்த முத்தச் சுவட்டிற்கும் பக்தர்கள் ஆன்மாவின் சிறுமை, இறைவனின் பெருமை, பேராற்றல் ஆகியவற்றை உணர்வது வானநூல் திறமைக்கும், பொய்கையாழ்வாரின் ஞானம் திருமாலைப் பற்றியிருப்பதற்கு ஆறுகள் கடலை நோக்கியும், தாமரை கதிரவனை நோக்கியும், உயிர்கள் எமதர்மனைச் சென்று கிட்டுவதும்,

கண்ணபிரானின் திருக்கண்களுக்குத் தாமரை மலர்களும் உவமைகளாகக் கூறியுள்ளார்.

'கூடிடு கூடலே,' 'என்பு' 'இல்,' மேம்பொருள், 'ஆம்பரிசு,' 'சோம்பர்' ஆகிய சொற்களுக்குப் பொருள் விளக்கம் மொழிந்துள்ளார்.

பாண்டீரவடம் என்ற வடசொல் திரிந்து பாண்டிவனம் என்றாயிற்று. யாமுனையாற்றின் அருகில் ஆலமரம் உள்ள இடம். பலராமன், பிலம்பன் என்ற அசுரனைக் கொன்ற இடம்.

பக்தவிலோசனம் பக்தம் - அன்னம், சோறு; விலோசனம் - பார்வை, சோறு பார்த்திருக்கும் இடம்.

பூதம் என்ற சொல்லுக்கு சத்தைப் பெற்றது என்று பொருள்.

எம்பெருமானின் திருக்குணங்களை அநுபவித்துச் சத்தைப் பெற்றார் என்னும் காரணத்தால் பூதத்தாழ்வாரென்று திருநாமம் ஆயிற்று என்று பெயர் விளக்கம் இயம்பியுள்ளார்.

திருப்பாணாழ்வார், பெருமாளின் பேரழகில் அகப்பட்ட நிலையில் ஐயோ, என் நெஞ்சை இழுத்துக் கொண்டதென்பர். இதனைப் பெரியவாச்சான் பிள்ளை, அழகிய மணவாளப் பெருமாள் நாயனார், கம்பர் ஆகியோரின் கருத்துகளை எடுத்துக் காட்டியுள்ளார்.

முதல் ஆழ்வார் மூவரும் அந்தாதி அருளிச் செய்த திருகோவலூரைப் போற்றிப் புகழ்வர். இதில் வரந்தருவார், வேதாந்த தேசிகர், ஆகியோரின் கருத்துகளை எடுத்துரைத்துள்ளார்.

ஆய்ச்சியர்களின் ஆடைகளைக் கவர்ந்த கண்ணன், ஆடைகளை மீண்டும் அவர்களிடத்தில் கொடுக்கின்றான். ஆடைகளைப் பெற்ற

ஆய்ச்சியர்கள் புணர்ச்சிக்கு இணங்குகின்றனர். புணர்ச்சிக்குப் பின் பிரிவு ஏற்படுகின்றது. மீண்டும் வாய்ப்பு எப்போது நிகழும் என்பதையறியக் கூடல் இழைத்தல், பெரியாழ்வார், திருமணத்தைப் பற்றி ஆண்டாளிடம் வினவுதல், ஆண்டாள், இயற்றிய திருப்பாவையில் அர்த்தப் பஞ்சகங்களின் தத்துவங்களை எடுத்துக் கூறுதல், ஆண்டாள், கண்ணன் தன்னிடம் கலவி செய்யாத நிலையில் அவனின் பிரிவைத் தாங்காது பிரிந்திருப்பவர்களைக் கூட்டவல்ல காமனை நோக்கி இரந்து வேண்டுதல், பெருமானை அறிகின்ற அறிவுதான் ஞானம் என்பதைக் கூறல், இறைவனை உணரக்கூடிய கருத்துகளை விளக்குதல், இறைவனைக் காண்பதற்கு இருளாத சிந்தை வேண்டும் என்பதை விளக்குதல், ஞானம் சிறப்புற உள்ளம் கலங்கமற்றிருத்தல் வேண்டும் என்பதை எடுத்துக்காட்டல், பெருமாள், திருக்கோயிலின் அரங்க மண்டபத்தில் துயிலல் ஆகிய இடங்களில் வினா விடைப் பாங்கினை எடுத்தாண்டுள்ளார்.

நந்தவனத்தில் கிடைத்த பெண்மகவு பற்றிக் கூறுமிடத்து கம்பராமாயணத்தில் சனகன் யாகபூமியை உழும் போது சீதாப் பிராட்டி கிடைத்த நிகழ்வு, லோகசாரங்க மாமுனிவர், திருப்பாணாழ்வாரிடத்துச் சினம் பலிக்குமிடத்துக் காத்துக் கொள்பவனே சினம் காப்பவன் என்பதை எடுத்துரைத்தல் திருமங்கையாழ்வாரின் பாசுரத்தில் ஆண்யானை தன் பெண் யானைக்கு மூங்கில் குருத்தைக் கொடுத்து மகிழ்விப்பதைக் கம்பர் சித்திரகூட மலையின் காட்சியினைச் சீதைக்கு, ராமன் வாயிலாக எடுத்துக்காட்டல், முனிவர்கள் அதிகாலையில் துயில் எழுவது போன்று குரங்குகளும் சுனையில் நீராடி மலர்களைக் கொண்டு இறைவனைப் பணிந்து நிற்பதைக் கம்பர் சித்திரகூடக் குரங்குகளின்

செயல்களோடு ஒப்புமைப்படுத்தல் ஆகிய பன்னூற் கருத்துகளை எடுத்தாண்டுள்ளார்.

இறைவனை அறிய முயலும் போது அறிவு அறியாமையாகி விடுதல், தொண்டரடிப்பொடியாழ்வார், தேவதேவியுடன் சிலகாலம் மகிழ்ச்சியாக வாழ்கின்றாள். அந்தணரின் செல்வம் முழுவதும் அழிந்த நிலையில் தேவதேவி கைவிட்டுச் செல்லல், தொண்டரடிப் பொடியாழ்வார், பேரின்பத்தைக் கைவிட்டுச் சிற்றின்பத்தை நாடுதல், திருமழிசையாழ்வார், நெஞ்சமாகிய நிலத்தில் விதையாகியத் தமிழை விதைத்துப் பக்தியாகிய பயிரை வளரச் செய்தல், குலசேகரப்பெருமாள், குழந்தைச் செல்வம் நிரம்பப் பெற்றதைக் கூறல், யசோதைப் பிராட்டி, தெய்வ நங்கை எனச் சிறப்பிக்கப் பெறல், யசோதை, கண்ணனின் இளம்பருவத்தை அநுபவிக்காது புலம்புதல், மன்னன், குடிமக்களிடத்து அருள் செய்யாது துன்பம் விளைவித்த நிலையில் மக்கள், மன்னனின் செங்கோலை எதிர்பார்த்து நிற்றல் ஆகிய செய்திகளைக் கூறுமிடத்துக் குறளை எடுத்துக்காட்டியுள்ளார்.

தமிழ்ப் புலவர்கள் பொய்கையாழ்வார் பாடல்களைப் ‘பொய்கையார் வாக்கு’ என்று பாராட்டுவதை, வைணவர் ‘திருவிளக்கு’ என்று பாராட்டல், குலசேகரப்பெருமாள், இராமாயணத்தின் மீது ஈடுபாடு கொண்டு தம்மை மறந்த நிலையினை ஒட்டஉணர்தல் (Empathy) என்று உளவியல் கருத்தோடு குறிப்பிடுதல், குலசேகரப்பெருமாள், பாகவதத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர். பாகவதர்களின் பெருமையை எடுத்துரைக்கும் ஸ்ரீவசன பூஷணத்தைக் கூறல் ஆகிய பல்துறைக் கருத்துக்களைக் கூறியுள்ளார்.

தாய், தன் குழந்தையை வெறுத்தாலும் குழந்தை தாயின் கருணையைப் பெறுவதைத் திருவாசகம், குறுந்தொகைப் பாடலோடும்; குலசேகரப் பெருமாள் திருவேங்கட மலையில் தம்பகமாய்ப் பிறக்க விரும்பிய நிலையில் வனத்துறை அலுவலர் பணியோடும் ; திருவேங்கட மலையில் பொற்குவடாகப் பிறக்க வேணடுமென்று எண்ணிய நிலையில் தெய்வத் திருமேனி அமைத்தலோடும் ஒப்புமைப் படுத்தியுள்ளார்.

## சான்றெண் விளக்கம்

1. கே.எம்.தாமஸ், பிரிட்டானிகா தகவல் களஞ்சியம், ப.679
2. இரா.மோகன், ஞ.சொக்கலிங்கம், உரைமரபுகள், ப.159
3. ந.சுப்புரெட்டியார், ஆழ்வார்களின் ஆரா அமுது, ப.4
4. மேலது, ப.17
5. மேலது, ப.18
6. மேலது, ப.21
7. மேலது, ப.38
8. மேலது, ப.38
9. மேலது, ப.54
10. மேலது, ப.66
11. மேலது, ப.42
12. மேலது, ப.54
13. மேலது, ப.67
14. மேலது, ப.79
15. மேலது, ப.122
16. மேலது, ப.148
17. மேலது, ப.168
18. மேலது, ப.190
19. மேலது, ப.226
20. மேலது, ப.250
21. மேலது, ப.251
22. மேலது, ப.251
23. மேலது, ப.269

24. மேலது, ப.285

25. ஆ.தமிழண்ணல், தொல்காப்பியம் மூலமும் கருத்துரையும், ப.425

26. இளம்பூரணர் (உ.ஆ.), தொல்காப்பியம் பொருளதிகாரம், ப.377

27. அர.சிங்காரவடிவேலன், சங்க இலக்கிய உவமைகள், ப.25

28. மேலது, ப.29

29. இளம்பூரணனர் (உ.ஆ.), தொல்காப்பியம் பொருளதிகாரம், ப.375

30. ந.சுப்புரெட்டியார், ஆழ்வார்களின் ஆரா அமுது, ப.3

31. மேலது, ப.7

32. மேலது, ப.15

33. மேலது, ப.28

34. மேலது, ப.40

35. மேலது, பக்.40-41

36. மேலது, ப.41

37. மேலது, பக்.51-52

38. மேலது, ப.55

39. மேலது, ப.58

40. மேலது, ப.59

41. மேலது, ப.70

42. மேலது, ப.127

43. மேலது, ப.159

44. மேலது, ப.73

45. மேலது, ப.110

46. மேலது, ப.120

47. மேலது, ப.251

48. மேலது, ப.35

49. மேலது, ப.185

50. மேலது, பக்.185-186

51. மேலது, ப.225

52. மேலது, ப.226

53. மேலது, ப.226

54. மேலது, ப.226

55. மேலது, பக்.226-227

56. மேலது, ப.18

57. மேலது, ப.45

58. மேலது, ப.45

59. மேலது, ப.84-85

60. மேலது, ப.72

61. மேலது, பக்.72-73

62. மேலது, ப.83

63. மேலது, ப.83

64. மேலது, பக்.35-36

65. மேலது, ப.36

66. ந.உசாதேவி, உ.வே.சாமிநாதையர் உரைநடை நூல்கள் உணர்த்தும் புலப்பாட்டு நெறி, ப.28

67. ந.சுப்புரெட்டியார், ஆழ்வார்களின் ஆராஅமுது, பக்.32-33

68. மேலது, ப.13

69. மேலது, ப.20

70. மேலது, ப.30

71. மேலது, ப.47

72. மேலது, பக்.112-113

73. மேலது, பக்.113-114

74. மேலது, ப.143

75. மேலது, ப.144

76. மேலது, ப.222

77. இரா.மோகன், ந.சொக்கலிங்கம், உரை மரபுகள், ப.57

78. மேலது, ப.356

79. ந.சுப்புரெட்டியார், ஆழ்வார்களின் ஆரா அமுது, ப.2

80. மேலது, ப.103

81. மேலது, ப.105

82. மேலது, ப.109

83. மேலது, ப.55

84. மேலது, ப.113

85. மேலது, பக்.205-206

86. மேலது, ப.206

87. மேலது, ப.179

88. மேலது, ப.237

89. மேலது, ப.251

90. மேலது, பக்.251-252

91. மேலது, பக்.279-280

92. மேலது, ப.123

93. மேலது, ப.177

94. மேலது, பக்.177-178

95. மேலது, ப.240

96. மேலது, ப.265

97. மேலது, ப.276

98. மேலது, ப.33

99. மேலது, ப.277

100. மேலது, பக்.277-278

101. மேலது, ப.273

102. மேலது, பக்.273-274

103. மேலது, ப.276

104. இரா.குமரவேலன், இலக்கிய உரையாசிரியர்கள் தமிழ் இலக்கியக் கொள்கை, பக்.362-363

105. ந.சுப்புரெட்டியார், ஆழ்வார்களின் ஆராஅமுது, ப.36

106. மேலது, ப.36.

# முடிவுரை

பெரியாழ்வார், ஸ்ரீவில்லிபுத்தூரில் திருத்துழாய் பாத்தியமைத்தற்காக நந்தவனத்தைக் களைக்கொட்டு கொண்டு தோண்டுமிடத்து பெண்மகவு கிடைத்த நிகழ்வை, கம்பர் பாடலோடு எடுத்துரைக்குமிடத்து கதிர் - சூரியன், புவிமடந்தை - பூமிதேவி, புணரி-கடல் என்றும்,

கோதை, தன் தந்தையாகிய பெரியாழ்வார் போன்று இயற்கை அழகுகளில் எல்லாம் கண்ணனையே கண்டதைக் கூறுமிடத்து கொண்டல்- மேகம், வரை - மலை, கண் - கறுத்த, பூவை - பூவைப்பூ என்றும்,

கோதை, வேணுகோபாலன் தான் படரவேண்டிய கொள்கொம்பு என்று உணர்ந்த நிலையில் ஆபரணங்களை அணிந்து, நீலநிறப் புடவையை உடுத்தி, கோவைப் பழம் போன்ற தன் சிவந்த வாயை திருத்திக்கொண்டு மணிவண்ணனின் பெயரைப் பிதற்றிக் கொண்டிருந்ததைக் கண்ட பெரியாழ்வார் திடுக்கிட்டுத் தன் அனுபவத்தை நற்றாய் நிலையில் கூறுமிடத்து, காறை - கழுத்தணி ; கூறை - ஆடை ; அயர்க்கும் - மறக்கும் ; தேறி - தெளிந்து என்றும் சொற்பொருள்களைக் காட்டியுள்ளார்.

ஆண்டாள், கண்ணன் தன்னிடத்துக் கலவி செய்யாத நிலையில் அவனின் பிரிவைத் தாங்காது பிரிந்திருப்பவர்களைக் கூட்டவல்ல காமனை நோக்கி இரந்து வேண்டுதலில் வானவர் - தேவர்கள், வகுத்த-கொடுத்த, உத்தமன் - புருடோத்தமன், உன்னித்து- ஆதரவுடன் என்றும்,

கண்ணன் இரவில் பெண்களுடன் புணர்ந்து பிற்பகுதியில் உறங்கக் கூடியவன். பொழுது விடியும் வரை கண் விழிக்கமாட்டான்

என்று நினைத்த ஆய்ச்சியர் பொய்கைக்கு நீராட வருகின்றனர். இதையறிந்த கண்ணன் அப்பெண்கள் வருமுன்னர் பொய்கை அடைகிறான். அவர்கள் ஆடைகளைக் களைந்து கரையில் வைத்தபோது அதனை வாரிச் சுருட்டிக்கொண்டு குருந்த மரத்தின் மீது ஏறி மறைகிறான். இதனைக் கூறுமிடத்து 'குடைந்து - மூழ்கி ; ஆழியன்- சூரியன்; அரவணை - பாம்புப் படுக்கை என்றும்,

ஆண்டாள், கண்ணனை அடையவேண்டிக் குயிலை வேண்டுவதாக அமையும் பாடலில் ஞாழல் - தாழை, பொதும்பு - பொந்து என்றும் சொற்பொருள்களை அமைத்துள்ளார்.

ஆண்டாள் பெருமாளிடத்துத் தூது விடுத்தல், காதல் முற்றிய நிலை, பெருமாளின் மார்பு, திருப்பாணாழ்வாரை ஆட்கொள்ளல் ஆகிய கருத்தமைந்த பாடல்களில் சொற்பொருள்களை அமைத்துள்ளார்.

திருப்பாணாழ்வார், பெருமாளின் அனைத்து உறுப்புகளிலும் தன் உள்ளத்தைப் பறிகொடுத்து உள்ளம் மகிழ்ச்சியடைந்ததைக் கூறுமிடத்து பாலகன் - குழந்தை ; ஞாலம் - உலகம் ; கோலம் - அழகிய; ஆரம் - மாலை ; தாமம் - மாலை ; எழில் - அழகு ஆகியனவற்றை எடுத்துரைத்துள்ளார்.

பொய்கையாழ்வாரின் முதல் திருவந்தாதி 86, 38, 40, 44;1-2, 67;4, 68, 81, 17;1-2, 92, 67, 99, 33;3-4, 95, 87;2, 72 ஆகிய பாசுரங்களில் இடம்பெறும் சொற்களுக்குப் பொருள் கூறியுள்ளார்.

பூதத்தாழ்வாரின், இரண்டாம் திருவந்தாதி 1;1-2, 89;1-2, 75, 72, 57, 4, 39, 42, 81, 27;3, 21, 59 ஆகிய பாசுரங்களில் உள்ள சொற்களுக்குப் பொருள் அமைத்துள்ளார்.

*பேயாழ்வார் மூன்றாம் திருவந்தாதி 1, 62, 54;3, 42;2, 60;3, 70, 71, 45, 58, 39;1-2, 12;1-2, 79;1-2, 78, 22;3-4, 76;1-2, 76;3-4, 59;3-4, 86, 87, 10;1 ஆகிய பாசுரங்களுக்குச் சொற்பொருள்களைக் கூறியுள்ளார்.*

*குலசேகரப் பெருமாளின் பெருமாள் திருமொழியிலுள்ள 8, 5;4, 1;1-2, 1;3, 2, 3;3-4, 4,5;3-4, 6, 7, 8, 9 ஆகிய பாசுரங்களுக்குச் சொற்பொருகளை எடுத்துரைத்துள்ளார்.*

*திருமழிசையாழ்வாரின் திருச்சந்த விருத்தப் பாசுரங்களான 90;1, 98;1-2, 120, 100;3, 104;3-4, 92;4, 90;3-4 நான்காம் திருவந்தாதிப் பாசுரங்களான 40;1, 54;3-4, 13;3, 9;2-3, 69;2, 85;1 ஆகியவற்றிற்கும்*

*தொண்டரடிப்பொடியாழ்வாரின் திருமலை 33;3-4, 16, 7, 8;1, 9, 42, 41, 43, 14, 20, 38, 4, 12 ஆகியவற்றிற்கும் பொருள்களைக் கூறியுள்ளார்.*

*திருப்பாவை, நாச்சியார் திருமொழி ஆகிய இரு பிரபந்தங்களிலும் இடம்பெற்றுள்ள 'திரு,' ; திருப்பாவையிலுள்ள 'பாவை,' ; திருப்பாவையின் உள்ளுறைப் பொருளான 'சுவாபதேசப் பொருள், ஆண்டாள், பெருமாளுக்கு 'ஒன்று நூறாயிரமாகக் கொடுத்தல்,' ; சீவான்மா, பரமான்மாவுடன் கலக்குமிடத்து கடற்பஞ்சு போன்ற நிலையையடையும்போது பரபக்தி, பரஞானம், பரமபக்தி ஆகிய பிரிவுகள், வினை அல்லது கன்மத்தின் மூன்று வகைகளான ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தம் ; பெருமானின் திருமேனியான பரத்துவம், வியூகம், விபவம், அந்தர் யாமித்துவம், அர்ச்சை ; பூதத்தாழ்வாரின் இரண்டாம் திருவந்தாதி 4;1 பாசுரத்தில் இடம்பெறும் 'நகரிழைத்து,'; 8;4 பாசுரத்தில் இடம்பெறும் 'அலைபண்பால்' ; 81;1 பாசுரத்திலுள்ள*

'நாரணனைக் கண்டேன்' ; திருமழிசையாழ்வாரின் திருச்சந்த விருத்தம் 98 ; 1 பாசுரத்தில் இடம்பெறும் 'மறம்,' 'வஞ்சம்'; இறைவனை அடையும் வழியாகிய 'இதம்' ; 'பிரசாதம்' ; பெருமாளின் திருத்தலங்களாகிய 'ஊரகம்,' 'பாடகம்,' 'வெஃகா'; தொண்டரப்பொடியாழ்வாரின் திருமாலை 7;3 பாசுரத்திலுள்ள 'கலையறக்கற்ற மாந்தர்' ; பெருமான் பள்ளி கொண்டதாகிய 'மேற்குத்திக்கு' ; 'கீழைத்திக்கு' ; 'வடக்குத் திக்கு,' 'தெற்குத் திக்கு' ; பெருமாளின் திருமேனியாகிய பரம், வியூகம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை ; குலசேகரப் பெருமாளின் பெருமாள் திருமொழி 6;2 பாசுரத்தில் இடம்பெறும் 'வல்வினையேன்' அழகிய மணவாளனுடைய கண்நோக்கிலுள்ள 'திருமணத்தூண்' ; இரசவாதிகள் கையில் வைத்திருக்கும் 'பரிசவேதி' ; பெருமாள் திருமொழி 8ஆம் பாசுரத்தில் இடம்பெறும் 'மாலை' ஆகிய சொற்களுக்குப் பொருள் விளக்கம் எடுத்துரைத்துள்ளார்.

பெரியாழ்வார், துளப் பாத்திகளுக்குள் கீழே கண்டெடுக்கப்பட்டக் குழந்தையை விரஜையிடம் கொடுத்த நிலையில் பிள்ளைக் கலிதீர பெருமாள் இக்குழந்தையைக் கொடுத்ததாக எண்ணி உவகை அடைதல், பெரியாழ்வார், ஸ்ரீவில்லிபுத்தூரில் எழுந்தருளியிருக்கும் ஆழிலைப் பள்ளியான் மீது கோதை கொண்ட பக்தியைக் கண்டு மகிழ்ச்சியடைதல், ஆண்டாள், தன் மார்பகங்களில் குங்குமக் குழம்பு பூசி அணி செய்து பயனுடையதாகச் செய்ய விரும்பல், திருப்பாணாழ்வார், இறைவனின் அழகை அக புறக்கண்களால் அனுபவித்த நிலையில் வாயில் வெண்ணெய் மணக்கிறது என்றல், பொய்கையாழ்வார், எம்பெருமானையன்றிப் பொருள்களைப் பற்றி அறியும் அறிவு அறிவல்ல என்றல், பூதத்தாழ்வார், பக்திநெறி, பரமபதத்தைப் போன்று

இன்பமானதென்றல், திருமழிசையாழ்வாரின் பாசுரத்தில் திருமாலின் பெருமையும், வைணவ தத்துவமும் மாபெருங்கடல் என்றல், திருமழிசையாழ்வார், பெருமானுடைய கால்வலையில் அகப்பட்டவர் என்றல், திருமழிசையாழ்வார், பெருமானின் திருவடியை வணங்குவதற்குத் திருமாலின் அருள் வேண்டுமென்றல் என்று தொடர் நயங்களை எடுத்துரைத்துள்ளார்.

சினம் காப்பதும் காவாததும் ஒன்றுதான் என்றல், வைணவர்களுக்குப் பெருமாளின் திருவடிப்பேறு அடையத்தக்க குறிக்கோள் என்றல், உள்ளம் தெளியத் தெளியக் கடவுள் உண்மையும் தெளிவாகும் ஞானம், மெய்ஞ்ஞானமாகும் என்றல்,

பரஞானம் என்பது பெருமானை நேரில் காணல், நீரை விட்டுப் பிரிந்த மீன்போல் மூச்சு அடங்கும்படி இருத்தல் ‘பரமபக்தி’, புலன்களை அடக்குவதற்குரிய வழி பக்தி. இறைவனிடத்தில் மனம் சுழித்தோடினால் ஆசைகளும் எண்ணங்களும் தாமே ஓடிப்போகும் என்றல், பெருமானை வழிபடும் போது உள்ளத்தில் தூய்மையும், உள்ளம் களங்கமற்று இருந்தால் பக்தன் உள்ளத்தில் பள்ளியும் கொள்வான் என்றல், திருவேங்கட மலையிடத்து ஆழங்கால்பட்டதைக் கூறல், பிறவிப் பயனைக் கடக்க வேண்டுமென்றல், பாகவதர்களின் ஸ்ரீபாத தீர்த்தத்தை உட்கொள்ளல், எல்லாப் பாவங்களும் பரிகாரம் ஆவதற்குரிய கழுவாயென்றல், உடம்பைக் கொடிய தவத்தாலும் விரதத்தாலும் வதைத்து உடம்பை எலும்புக் கூடாக்குவது அறியாமை என்றல், பரமான்மாவுக்கும் சீவான்மாவுக்கும் உள்ள உறவுமுறை தாய்க்கும் சேய்க்கும் உள்ள உறவுமுறை போன்றதென்றல், பொய்கையாழ்வார், பூதத்தாழ்வாரின் பாசுரங்களுக்கு முன்மாதிரியாகத்

திகழ்வதை மாமல்லபுரச் சிற்பங்களுக்குக் காஞ்சி கைலாசநாதர் கோயிலை எடுத்துக்காட்டல், எம்பெருமான், ஆழ்வாரை அடிமை கொள்ள மேல் விழுந்த நிலையும் ஆழ்வார், எம்பெருமான்மேல் விழுகின்ற நிலையும் எடுத்துக்காட்டல் ஆகியனவற்றைக் கூறியுள்ளார்.

ஆகுபெயர், உவமை, உருவகம், உள்ளுறை ஆகிய இலக்கணக் குறிப்புகளை நயம்பட எடுத்துக்காட்டியுள்ளார்.

பெரியாழ்வார், ஸ்ரீவில்லிபுத்தூரில் நந்தவனத்தில் கண்டெடுக்கப் பட்ட குழந்தை ஆண்டாளுக்குத் தக்க வயது எய்தியதும் பஞ்ச சம்ஸ்காரங்களைச் செய்து வைத்தார். தாபம், புண்ட்ரம், நாமம், மந்திரம், யாகம் ஆகியன பஞ்ச சம்ஸ்காரங்கள்; புருஷகார பூதை, புருஷகாரம், க்ஷேத்துவம், பாரதந்திரியம், ஆன்மா அடையும் பயனிற்குத் தடைகல்லாக இருக்கக்கூடிய ஆன்ம விரோதி, பரத்துவ விரோதி, புருஷார்த்த விரோதி, உபாய விரோதி, பிராப்ய விரோதி ஆகிய வடமொழிச் சொற்களுக்குத் தமிழில் பொருள் விளக்கம் கூறியுள்ளார்.

காப்புநாண் (கங்கணம்), பொரிகளை அள்ளித் தெளித்தல் (லாஜஹோமம்), பழவினைகளை (சஞ்சித கர்மங்களை), வார்த்தையை (சரமசுலோகத்தை), குற்றமற்றவனாக்கி (நிஷ்கல் மஷனாக்கி), வாயிலுக்கும் வீட்டிற்கும் இடைப்பட்ட ஒடுக்கமான இடம் (தேஹளி), பாம்பணைப் பள்ளியானை (க்ஷேசாயியை), இதம் (ஹிதம்), எதிர்பாராமல் (யாத்ருச்சிகமாகவே), மிச்சலை (க்ஷேத்தை), முலை (அதர்), மயக்கம் (வியாமோகம்), சீவான்மா பரமான்மாவின் உடைமை (ஸ்வஸ்வாமி சம்பந்தம்) என்று தமிழ்ச் சொற்களை வடமொழியில் கூறியுள்ளார். வடமொழிச் சொற்களைத் தமிழ்ப்படுத்தியும், தமிழ்ச்

சொற்களை வடமொழிப் படுத்தியும் கூறியிருப்பதால் இவரின் வடமொழிப்புலமை புலனாகும்.

பெரியாழ்வார், ஸ்ரீவில்லிபுத்தூரில் நந்தவனத்தில் கண்டெடுக்கப் பட்ட பெண் மகவாகிய ஆண்டாளை, கோயிலில் இருந்து கொண்டு வரும் பிரசாதத்திற்கும், கோதை, கொள்கொம்பாகிய கண்ணனை அடைய நினைப்பதை மரத்தைச் சுற்றிப் படரும் பூங்கொடிக்கும், பெருமானின் பேரழகைக் கண்ட ஆண்டாளின் உள்ளத்திற்கு இரும்பை ஈர்க்கும் காந்தத்திற்கும், திருமாலைத் தன் நாயகனாகக் கொண்ட ஆண்டாளின் காதல் பெருக்கினை பள்ளமடை நீருக்கும், ஆண்டாளின் ஆற்றாமைக்குச் சிறுவர்களின் பிடிவாத குணமும், பெருமாள், ஆண்டாளை அணைந்து ஆற்றலைக் கொள்ளை கொள்ளுதல் உலங்கு என்ற கொசு விளாம்பழத்தில் மொய்த்து சாறு வற்றுவதற்கும் ஆண்டாள் இராமநாமங்களைச் சொல்லிச் செயலற்றிருப்பதற்கு மழைக்காலத்தில் எருக்கம் பழுப்புகள் அற்று விழுவதற்கும், திருப்பாணாழ்வாரின் உள்ளத்திற்கு வெண்ணெய்யும் திருப்பாணாழ்வார் தொண்டர் வேடம் பூண்டதற்குப் புலியைப் பார்த்துப் பூனை சூடு போட்டுக் கொள்ளலும் சோலையிலுள்ள மலர்கள் வீழ்தலுக்குத் தேவர்கள் பூமாரி பொழிதலும் திருப்பாணாழ்வார், கோவிந்தனை யாழிசையால் மகிழ்வித்தலுக்குக் கோபாலன் கோக்களை குழல் இசையால் மகிழ்வித்தலுக்கும் பெருமாளின் மேனி அழகிற்குப் பச்சை மாமலையும் பெருமாளை மலரிட்டுப் பணிதலுக்கு, அரசர்களை மலரிட்டுப் பணிதலுக்கும் திருமழிசையாழ்வார் பெருமாள் மீது கொண்ட நம்பிக்கை தழைப்பதற்குப் பட்டமரம் தழைப்பதும், பெருமாளின் திருபவளத்தில் இருக்கும் வெண்ணெய் சுவடினை

யசோதைப் பிராட்டி அழகருக்குக் கொடுத்த முத்தச் சுவட்டிற்கும் பக்தர்கள் ஆன்மாவின் சிறுமை, இறைவனின் பெருமை, பேராற்றல் ஆகியவற்றை உணர்வது வானநூல் திறமைக்கும், பொய்கையாழ்வாரின் ஞானம் திருமாலைப் பற்றியிருப்பதற்கு ஆறுகள் கடலை நோக்கியும், தாமரை கதிரவனை நோக்கியும், உயிர்கள் எமதர்மனைச் சென்று கிட்டுவதும், கண்ணபிரானின் திருக்கண்களுக்குத் தாமரை மலர்களும் உவமைகளாகக் கூறியுள்ளார்.

'கூடிடு கூடலே,' 'என்பு' 'இல்,' மேம்பொருள், 'ஆம்பரிசு,' 'சோம்பர்' ஆகிய சொற்களுக்குப் பொருள் விளக்கம் மொழிந்துள்ளார்.

பாண்டீரவடம் என்ற வடசொல் திரிந்து பாண்டிவனம் என்றாயிற்று. யாமுனையாற்றின் அருகில் ஆலமரம் உள்ள இடம். பலராமன், பிலம்பன் என்ற அசுரனைக் கொன்ற இடம்.

பக்தவிலோசனம் பக்தம் - அன்னம், சோறு; விலோசனம் - பார்வை, சோறு பார்த்திருக்கும் இடம்.

பூதம் என்ற சொல்லுக்கு சத்தைப் பெற்றது என்று பொருள்.

எம்பெருமானின் திருக்குணங்களை அநுபவித்துச் சத்தைப் பெற்றார் என்னும் காரணத்தால் பூதத்தாழ்வாரென்று திருநாமம் ஆயிற்று என்று பெயர் விளக்கம் இயம்பியுள்ளார்.

திருப்பாணாழ்வார், பெருமாளின் பேரழகில் அகப்பட்ட நிலையில் ஐயோ, என் நெஞ்சை இழுத்துக் கொண்டதென்பர். இதனைப் பெரியவாச்சான் பிள்ளை, அழகிய மணவாளப் பெருமாள் நாயனார், கம்பர் ஆகியோரின் கருத்துகளை எடுத்துக் காட்டியுள்ளார்.

முதல் ஆழ்வார் மூவரும் அந்தாதி அருளிச் செய்த திருகோவலூரைப் போற்றிப் புகழ்வர். இதில் வரந்தருவார், வேதாந்த தேசிகர், ஆகியோரின் கருத்துகளை எடுத்துரைத்துள்ளார்.

ஆய்ச்சியர்களின் ஆடைகளைக் கவர்ந்த கண்ணன், ஆடைகளை மீண்டும் அவர்களிடத்தில் கொடுக்கின்றான். ஆடைகளைப் பெற்ற ஆய்ச்சியர்கள் புணர்ச்சிக்கு இணங்குகின்றனர். புணர்ச்சிக்குப் பின் பிரிவு ஏற்படுகின்றது. மீண்டும் வாய்ப்பு எப்போது நிகழும் என்பதையறியக் கூடல் இழைத்தல், பெரியாழ்வார், திருமணத்தைப் பற்றி ஆண்டாளிடம் வினவுதல், ஆண்டாள், இயற்றிய திருப்பாவையில் அர்த்தப் பஞ்சகங்களின் தத்துவங்களை எடுத்துக் கூறுதல், ஆண்டாள், கண்ணன் தன்னிடம் கலவி செய்யாத நிலையில் அவனின் பிரிவைத் தாங்காது பிரிந்திருப்பவர்களைக் கூட்டவல்ல காமனை நோக்கி இரந்து வேண்டுதல், பெருமானை அறிகின்ற அறிவுதான் ஞானம் என்பதைக் கூறல், இறைவனை உணரக்கூடிய கருத்துகளை விளக்குதல், இறைவனைக் காண்பதற்கு இருளாத சிந்தை வேண்டும் என்பதை விளக்குதல், ஞானம் சிறப்புற உள்ளம் கலங்கமற்றிருத்தல் வேண்டும் என்பதை எடுத்துக்காட்டடல், பெருமாள், திருக்கோயிலின் அரங்க மண்டபத்தில் துயிலல் ஆகிய இடங்களில் வினா விடைப் பாங்கினை எடுத்தாண்டுள்ளார்.

நந்தவனத்தில் கிடைத்த பெண்மகவு பற்றிக் கூறுமிடத்து கம்பராமாயணத்தில் சனகன் யாகபூமியை உழும் போது சீதாப் பிராட்டி கிடைத்த நிகழ்வு, லோகசாரங்க மாமுனிவர், திருப்பாணாழ்வாரிடத்துச் சினம் பலிக்குமிடத்துக் காத்துக் கொள்பவனே சினம் காப்பவன் என்பதை எடுத்துரைத்தல் திருமங்கையாழ்வாரின் பாசுரத்தில்

ஆண்யானை தன் பெண் யானைக்கு மூங்கில் குருத்தைக் கொடுத்து மகிழ்விப்பதைக் கம்பர் சித்திரகூட மலையின் காட்சியினைச் சீதைக்கு, ராமன் வாயிலாக எடுத்துக்காட்டல், முனிவர்கள் அதிகாலையில் துயில் எழுவது போன்று குரங்குகளும் சுனையில் நீராடி மலர்களைக் கொண்டு இறைவனைப் பணிந்து நிற்பதைக் கம்பர் சித்திரகூடக் குரங்குகளின் செயல்களோடு ஒப்புமைப்படுத்தல் ஆகிய பன்னூற் கருத்துகளை எடுத்தாண்டுள்ளார்.

இறைவனை அறிய முயலும் போது அறிவு அறியாமையாகி விடுதல், தொண்டரடிப்பொடியாழ்வார், தேவதேவியுடன் சிலகாலம் மகிழ்ச்சியாக வாழ்கின்றாள். அந்தணரின் செல்வம் முழுவதும் அழிந்த நிலையில் தேவதேவி கைவிட்டுச் செல்லல், தொண்டரடிப் பொடியாழ்வார், பேரின்பத்தைக் கைவிட்டுச் சிற்றின்பத்தை நாடுதல், திருமழிசையாழ்வார், நெஞ்சமாகிய நிலத்தில் விதையாகியத் தமிழை விதைத்துப் பக்தியாகிய பயிரை வளரச் செய்தல், குலசேகரப்பெருமாள், குழந்தைச் செல்வம் நிரம்பப் பெற்றதைக் கூறல், யசோதைப் பிராட்டி, தெய்வ நங்கை எனச் சிறப்பிக்கப் பெறல், யசோதை, கண்ணனின் இளம்பருவத்தை அநுபவிக்காது புலம்புதல், மன்னன், குடிமக்களிடத்து அருள் செய்யாது துன்பம் விளைவித்த நிலையில் மக்கள், மன்னனின் செங்கோலை எதிர்பார்த்து நிற்றல் ஆகிய செய்திகளைக் கூறுமிடத்துக் குறளை எடுத்துக்காட்டியுள்ளார்.

தமிழ்ப் புலவர்கள் பொய்கையாழ்வார் பாடல்களைப் 'பொய்கையார் வாக்கு' என்று பாராட்டுவதை, வைணவர் 'திருவிளக்கு' என்று பாராட்டல், குலசேகரப்பெருமாள், இராமாயணத்தின் மீது ஈடுபாடு கொண்டு தம்மை மறந்த நிலையினை ஒட்டஉணர்தல்

(Empathy) என்று உளவியல் கருத்தோடு குறிப்பிடுதல், குலசேகரப்பெருமாள், பாகவதத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர். பாகவதர்களின் பெருமையை எடுத்துரைக்கும் ஸ்ரீவசன பூஷணத்தைக் கூறல் ஆகிய பல்துறைக் கருத்துக்களைக் கூறியுள்ளார்.

தாய், தன் குழந்தையை வெறுத்தாலும் குழந்தை தாயின் கருணையைப் பெறுவதைத் திருவாசகம், குறுந்தொகைப் பாடலோடும்; குலசேகரப் பெருமாள் திருவேங்கட மலையில் தம்பகமாய்ப் பிறக்க விரும்பிய நிலையில் வனத்துறை அலுவலர் பணியோடும் ; திருவேங்கட மலையில் பொற்குவடாகப் பிறக்க வேணடுமென்று எண்ணிய நிலையில் தெய்வத் திருமேனி அமைத்தலோடும் ஒப்புமைப் படுத்தியுள்ளார்.

இவற்றின் வாயிலாக நா.சுப்புரெட்டியாரின் பன்னோக்குத் திறன் வெளிப்படுவதை அறியமுடிகிறது.

# துணைநூற்பட்டியல்

**முதன்மைச் சான்றாதாரம்**

1. சுப்புரெட்டியார், ந. — ஆழ்வார்களின் ஆரா அமுது, நூற்றாண்டு குழு வெளியீடு, சென்னை, இரண்டாம் பதிப்பு - 2018.

**துணைமைச் சான்றாதாரங்கள்**

2. அரவிந்தன், மு.வை. — உரையாசிரியர்கள், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, மூன்றாம் பதிப்பு - 1995.

3. இளம்பூரணர், (உ.ஆ.) — தொல்காப்பியம் பொருளதிகாரம், சாரதா பதிப்பகம், சென்னை, 2015.

4. உசாதேவி, நா. — உ.வே.சாமிநாதையர் உரைநடை நூல்கள் உணர்த்தும் புலப்பாட்டு நெறி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2008.

5. குமரவேலன், இரா. — இலக்கிய உரையாசிரியர்கள், தமிழ் இலக்கியக் கொள்கை தொகுதி-2, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1975.

| | |
|---|---|
| 6. கோவேந்தன், த. | நாலாயிரத் திவ்யப் பிரபந்தம் பாகம்-1,<br>ஸ்ரீ செண்பகா பதிப்பகம்,<br>சென்னை,<br>2012. |
| 7. தமிழண்ணல், ஆ. | தொல்காப்பியம் மூலமும் கருத்துரையும்,<br>மீனாட்சி புத்தக நிலையம்,<br>மதுரை,<br>2008. |
| 8. திருஞானசம்பந்தம், ச. | நன்னூல் எழுத்ததிகாரம் (காண்டிகை உரை),<br>கதிர் பதிப்பகம்,<br>திருவையாறு,<br>2010. |
| 9. திருவேங்கட இராமானுஜதாசன், த. | நாலாயிரம் திவ்வியப் பிரபந்தம்<br>இரண்டாம் ஆயிரம் மூலமும் உரையும்,<br>உமா பதிப்பகம்,<br>சென்னை,<br>2010. |
| 10. மேலது | நாலாயிரம் திவ்வியப் பிரபந்தம்<br>மூன்றாம் ஆயிரம் மூலமும் உரையும்,<br>உமா பதிப்பகம்,<br>சென்னை,<br>2010. |

11. மேலது நாலாயிரம் திவ்வியப் பிரபந்தம் நான்காம் ஆயிரம் மூலமும் உரையும், உமா பதிப்பகம், சென்னை, 2010.

12. சிங்காரவடிவேலன், அர. சங்க இலக்கிய உவமைகள், பழநியப்பன் பதிப்பகம், தேவகோட்டை, 1986.

13. செல்வநாயகம், வி. தமிழ் உரைநடை வரலாறு, இலங்கைப் பல்கலைக் கழகம், பேராதனை, 1957.

14. சுப்பிரமணிய முதலியார், வெ.ப. கம்பராமாயண சாரம் பாலகாண்டம், வெ.ப.சு. நூல் நிலையம், திருநெல்வேலி, இரண்டாம் பதிப்பு, 1955.

15. நாராயண வேலுப்பிள்ளை, எம். கம்பராமாயணம் (அயோத்திய காண்டம்) தொகுதி-1, மூலமும் உரையும், திருமகள் நிலையம், சென்னை, 2006.

16. பாலசுப்பிரமணியன், கு.வெ. நாச்சியார் திருமொழி, மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, 2011.

*17.* மாணிக்கம், வ.சுப., ஒப்பியல் நோக்கு,
மணிவாசகர் நூலகம்,
சிதம்பரம்,
*1978.*

*18.* மோகன், இரா.
சொக்கலிங்கம், ந. உரை மரபுகள்,
மெய்யப்பன் பதிப்பகம்,
சிதம்பரம்,
*2011.*

**களஞ்சியம்**

*19.* தாமஸ், கே.எம். பிரிட்டானிகா தகவல் களஞ்சியம்
தொகுதி - 3,
என்சைக்ளோ பீடியா பிரிட்டானிகா
(இந்தியா),
ஆனந்த விகடன் அச்சகம்,
சென்னை,
*2007.*




# India Book of Records

## CERTIFICATE

### CENTENARY CELEBRATIONS OF PROF DR. N SUBBU REDDIAR

**Prof Dr S Ramalingam (born on 13 Oct 1949) Organizing Secretary, Na Subbu Reddiar 100 Educational Trust, Chennai, Tamil Nadu, has conceived, designed and meticulously executed 108 Centenary Events throughout Tamil Nadu during the Centenary Year (2015-2016) of Prof. Dr. N Subbu Reddiar who served the cause of education for 65 years andwritten 135 books in various fields (100 books after retirement).**




**Biswaroop Roy Chowdhury**
Chief Editor
**India Book of Records**

**Date: March 19, 2018**

*India Book of Records is registered with the Government of India with RNI no. HARENG/2010/32259.*

*India Book of Records is affiliated to Asia Book of Records and follows Asian Protocol of Records (APRs) as per the consensus arrived at the meeting of the Chief Editors of National Record Books, Ho Chi Minh City, Vietnam.*




First Paper: என்ன ஆச்சரியம்? "Enna Aacharyam !" [1949]

# ஓர் அறிமுகம்

பேராசிரியர்

# ந சுப்பு ரெட்டியார்



Books Published : 135 + 1
Papers Published : 200 [Tamil 173 + English 27]
Endowments established: 10
Endowment Lectures : 12
Awards received: 8
Prizes won : 14
Titles conferred : 8

## Masterpieces:

1) Tamil Payitrum Murai [1957]
2) Religion & Philosophy of Naalayira Divyap-pirabhandham with special reference to Nammalwar [English][His PhD thesis ] [1977]
3) Kalvi Ulaviyal Kotpaadukal [1989]
4) Vainava Selvam [1995]

## Financial Aid for publishing the Books:

a) Tirumala Tirupathi Devasthanams - 21
b) Directorate of Tamil Development
Government of Tamil Nadu - 6

## Research on Professor's Books

a) University of Madras - 1993 (leading to PhD)
b) Madurai Kamaraj University - 2017 (leading to PhD)
c) Bharathiyar University - 2020 (leading to PhD)


ISBN 978-81-948697-8-8
9 788194 869788 >

பேராசிரியரின் 135 நூல்களில், தெரிவு செய்யப்பெற்ற 100 நூல்கள் (முழுமையாக)
https://archive.org/details/@centenary1916nsr2016
எனும் இணையதளத்தில் உள்ளன. [freely downloadable]

www.nasubbureddiar100.in